Rs 3-00 5-8-0 The Social Welfare. 12, Homji Street, Fort - Bombay.

# K. மாலதி



நடிக்கும்

# ராஜகுமாரி



எப்ரல் 11-ந் முதல்..




நக்ஷத்திரங்கள் :

K. மாலதி · K. தவமணி தேவி
M.S. பாக்கியம் · T.S. பாலையா ·
M.G. ராமச்சந்திரன் · M.R. சுவாமிநாதன்
M N நம்பியார் · புளிமூட்டை
M E மாதவன் முதலியோர்

டைரக்ஷன A.S.A. சாமி, B.A. (HONS)
பாட்டு: நாராயண கவி.

ஜூபிடர் பிக்சர்ஸ் சர்க்யூட், மதராஸ் · திருப்பூர்

MOORTHY
11.5.47.

## கவனிக்க! ....

பாரிஜாதம் சென்னைக் காரியாலயத்தின்
விலாசத்தைக் கீழே காணலாம்

★

நமது சந்தா நேயர்கள், ஏஜெண்டுகள், விளம்பரக்காரர்கள்
பின் வரும் விலாசத்திற்கு எழுதும்படி கோருகிறோம்

★

**பாரிஜாதம்**

எழும்பூர் : சென்னை

---

## பாரிஜாதம்

வருஷ சந்தா ரூ. 6-0-0

ஆறுமாத சந்தா ரூ. 3-0-0

●

ஆறுமாதத்துக்கு குறைந்த
சந்தா ஏற்றுக் கொள்ளப்
படமாட்டாது ....

மானேஜர் :

**பாரிஜாதம் : எழும்பூர், சென்னை**

## பரிசுக்கதை

●

சென்ற இதழில் வெளியான
'மீனாக்ஷியின் தியாகம்' என்ற
சிறுகதையை எழுதியவர்

**ஸ்ரீமதி சம்பகலக்ஷ்மி ராஜநாராயணன்**
72, எழும்பூர் ஹைரோடு, சென்னை.

பரிசுத்தொகை ரூ. 50
அவருக்கு அனுப்பப்பட்டது

—மானேஜர், பாரிஜாதம்

## தனலட்சுமி பிக்சர்ஸ் அர்ப்பணம்

**அமரத்வம் பெற்ற பாடல்கள் ஒலிக்கும் மகத்தானதோர் திரைப்படச் சின்னம்**




**29-3-47** சனிக்கிழமை முதல்

**சென்னை கிரௌன் & சன் தியேட்டர்களில் நடைபெறுகிறது**

சென்னை நகரம், தென்னாற்காடு, செங்கல்பட்டு ஜில்லாக்களுக்கு
வினியோக உரிமை பெற்றுள்ளவர்கள் :

**தனலட்சுமி பிக்சர்ஸ்,** மதருஸ் :: சித்தூர்

# பாரிஜாதம்

ஆசிரியர்: வஸந்தன்

மலர் 1] [இதழ் 7

ஏப்ரல் '47


## பொருளடக்கம்





நண்பர்கள் விருப்பம் ஓர் அளவு நிறைவேறியிருக்கிறது. இந்த இதழ் அதிகப்படியான பக்கங்களுடன் பல புதிய அம்சங்களுடன் வெளிவந்திருப்பதை நேயர்கள் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறோம். "அழியாதகாதல்" என்ற வரிசையில் தமிழ் நாட்டின் பிரபல சைத்திரிகர் எஸ். ராஜம் அவர்கள் எழுதியுள்ள அழகிய மூவர்ண அட்டைப்படம், கண்ணுக்கும், மனதிற்கும் விருந்தளிக்கும் என்று நம்புகிறோம்.

மேல்நாடு சென்று திரும்பிய அன்பர் ஒருவரின் "கனவு உலகம்" என்னும் ருசிகரமான யாத்திரைக் கட்டுரை இந்த இதழிலிருந்து ஆரம்பமாகிறது. 'தொழில் ரகசியம்' என்னும் கட்டுரை இனி ஒவ்வொரு இதழிலும் பிரசுரமாகும். வேலையில்லாமலிருக்கும் வாலிபர்கள் ஒவ்வொருவரையும் இக்கட்டுரையைக் கவனமாகப் படித்துப் பார்க்கும்படி கேட்டுக்கொள்கிறோம். உலக இலக்கியத்திலிருந்து பொறுக்கியெடுக்கப்பட்ட நல்ல கதைகளின் மொழிபெயர்ப்பு ஒவ்வொரு இதழிலும் பிரசுரமாகும்.

அடுத்த இதழ்........ஆம்; மே இதழ் எவ்வளவு அழகாக அமையப் போகிறது என்பதை நினைக்கும்போது, இப்பொழுதே நாம் பெருமையும் குதூகலமும் அடையாமலிருக்க முடியவில்லை.

ஆசிரியர்.



# ஜரிகைக் குல்லா

உஸ்மானின் கைகள் துரிதமாய் வேலையை இயற்றிக் கொண்டிருந்ததே தவிர, மனம் சிந்தனையின் வேகத்தில் அலைபாய்ந்து கொண்டிருந்தது. சூரிய ரச்மியே படாத இருள் கவிழ்ந்த அந்த அறைக்கும் அவனுக்கும் தொடர்பு ஏற்பட்டு இருபது வருஷங்கள் ஓடி மறைந்து விட்டன. அதற்குள்தான் அவன் வாழ்க்கையில் எவ்வளவு மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன? ஆனால் அந்த அறை? உஸ்மான் நிமிர்ந்து தன் கண்ணோட்டத்தை அறையின் நாலுபுறங்களிலும் செலுத்தினான். அவன் அந்த அறையில் காலடி வைத்த முதல் நாளில் காணப்பட்ட அதே சிலந்திக்கூடு இன்றும் மூலையில் ஊசலாடிக் கொண்டிருந்தது. குண்டும், குழியுமாக ஈரத்தைக் கக்கிக் கொண்டிருக்கும் அதே தரை. ஆனால் கால் ரூபாயிலிருந்து மூன்றுரூபாய்வரை ஏறிக்கொண்டே போன வாடகை மாற்றத்தைத் தான் அந்த அறை தாங்கிக் கொண்டு நின்றது. இதை மனதிற்குள் அனுபவித்த உஸ்மான் மெதுவாகத் தனக்குள் சிரித்துக் கொண்டான்.

"ஜீ அஸரத்! வேலை ரொம்ப மும்முரமா நடக்குதுங்களா?" என்ற குரலைக் கேட்டதும் நிமிர்ந்து நோக்கினான். எதிரே உசேன், சிறுவன் கரீமின் கையைப் பிடித்தவாறு நின்று கொண்டிருந்தான்.

தைத்துக்கொண்டிருந்த குல்லாவை அருகிலுள்ள ஆணியில் மாட்டிவிட்டு "உள்ளே வாருங்க, பாயி சாப்!" என்று கிழிந்த பாயை உட்காருவதற்காகச் சிறிது நீட்டி விட்டான். "ரம்ஸானுக்கு இன்னும் பத்துநாளு தானே இருக்கு? நல்ல கிராக்கிதான் போலிருக்கு" என்று அறையைச் சுற்றுமுற்றும் பார்த்தபடி கூறினான் உசேன். "என்ன சமாசாரம், இந்தப் பக்கம்!" என்றான் உஸ்மான்.

"ரம்ஸான் வருதுங்களே. இந்தப் பயலுக்கு ஒரு ஜரிகைக் குல்லா வேணும்" என்றான். மடியில் உட்கார்ந்து கொண்டிருந்த கரீம் "ஜீ! நீலக் குல்லா. ஜரிகை பளபளன்னு இருக்கணும்" என்றான், உஸ்மானின் முகத்தை உற்று நோக்கிக் கொண்டு.

"ரொம்ப துஷ்டன் ஸாப்", என்றான் சலித்தவாறு உசேன்.

"அல்லா கொடுத்த பரிசு அப்படித்தான் இருக்கும் பாயி. அது எல்

லாருக்கும் கிடைக்காது. அசீம்கூட இவன் மாதிரிதான் துடிதுடிப்பா இருப்பான்'' என்றான் உஸ்மான் ஒரு வரண்ட சிரிப்புடன்.

உஸ்மான் நீண்ட பெருமூச்சு விட்டான். "நான் நல்லா வேலையை முடிச்சுத் தாரேன். எனக்கு மட்டும் நீ ஒரு உதவி செய்யணும் பாயி!'' கிழவனின் குரல் கம்மி யிருந்தது.

"என்ன ஸாப்? கண்டிப்பாச் செய்யறேன்."

"நம்ம அசீம் இருக்கானுல்ல? ரொம்ப நாளா ஒரு ஜரிகைக்குல்லா வேணும்னு கேட்டுக்கிட்டே இருந்தான். அது முடியாமலே போயிருச்சி.'' உஸ்மான் பேச முடியாமல் நிறுத்தினான். "நீ சேரிலேயே அங்கே போறியே, பாயி. நான் ஒண்ணு தைச்சுக் கொடுக்கிறேன். உங்க நாயினா ரம்ஸானுக்காகக் கொடுத்தனுப்பிச்சாருன்னு சொல்லி அவன்கிட்டே கொடுத்துடணும். அவ்வளவு தான்.''

"இதென்ன கஷ்டம்? நான் கொடுத்துடறேன் ஸாப்'' என்றான் உசேன்.

"அல்லா உன்னைக் காப்பாத்துவார், பாயி.'' கண்களினின்றும் பெருகிய நன்றியோடு கூறினான்.

"நான் போய்வாரேன். ராவுக்குள்ளே தயாரா யிடட்டும்'' என்று கூறியபடியே தெருவை நோக்கி நடந்தான் உசேன்.

* * *

அவன் சென்றவுடன் தட்டுத் தடுமாறி ஒரு பெட்டியைத் திறந்து, பாதி தைத்து வைக்கப்பட் டிருந்த ஒரு சிகப்புக் குல்லாவை வெளியே எடுத்தான் உஸ்மான். மனோ வேகத்துடன் போட்டி போட்டுக் கொண்டு கைகள் அதைத் தைக்க ஆரம்பித்தன.

வருடங்கள் பல மாறுதல்களைத் தாங்கிக் கொண்டு ஓடிய போதிலும் உஸ்மான் மட்டிலும் கையால் குல்லா தைத்து விற்கும் தொழிலில் ஒருவித மாற்றமும் செய்ய வில்லை. தன்னுடைய ஒரே பெண்ணான பாதிமாவுடன்தான் முதன் முதலில் அவ் ஆருக்குக் குடியேறினான்.

பருவமடைந்து வந்த பாதிமாவின் நிக்காவைப் பற்றி அவன் கவலைப் பட்டதுமில்லை, அவசரப் பட்டதுமில்லை. ஆனால் பாதிமாவை பக்கத்தூரில் வெற்றிலை, டீக்கடையின் சொந்தக்காரனை அப்துல்லாசாஹிபு வலுவிலே வந்துதான் கல்யாணம் செய்து கொண்டான். பாதிமா கணவன் வீடு போய் விட்டாள். கண்களையே இழந்து விட்டதுபோல் இருந்தது உஸ்மானுக்கு.

ஒரு வருஷம் உருண்டோடியது. அப்பொழுதுதான் உஸ்மான் அதிர்ச்சி தரும் ஒரு விஷயம் கேள்விப் பட்டான். அன்று இரவு முழுவதும் அவன் உறக்கம் கொள்ளவே யில்லை. அப்துல்லா அடிக்கடி இரவு வேளைகளில் குடித்துவிட்டு வந்து பாதிமாவை அடித்துத் துன்புறுத்துகிறான், என்பதுதான் அது. ஒன்றிரண்டு முறை பாதிமாவின் கருணை தவழும் கண்களில் காணப்பட்ட கண்ணீர்த் துளிகள் அவை உண்மை என்பதை வெளிப்படுத்தின.

மூன்று வருஷங்களுக்கு முன்பு தான் அந்த சம்பவம் நடந்தது. ரம்ஸானுக்கு பத்துநாள் இருந்தது. உஸ்மான் குல்லா தைப்பதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தான். அசீம் அருகே உட்கார்ந்து கொண்டு துண்டித்துப் போடப்பட்டிருந்த துணிகளைச் சேகரித்து விளையாடிக் கொண்டிருந்தான். திடீரென்று ஓடி வந்து அவன் கழுத்தை கட்டிக்கொண்டு

"நாஞ! இப்பொ தைக்கிறையே அதுமாதிரி ஒரு ஜரிகைக் குல்லா தைச்சுத்தரமாட்டியா ?" என்ருன்.



"ஆவட்டும், ரம்ஸானுக்கு உனக்கு தைச்சுத்தரேன், என்ன ?" என்று அவனை அணைத்துக் கொண்டான். அவன் அணைப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு, "ஆ நாஞ ரம்ஸானுக்குக் குல்லா தைச்சுத்தரு வாரே" என்று குதித்தான் அஸீம். அப்பொழுது அங்கே யதேச்சை யாக வந்த பாதிமா "ரம்ஸானுக் ஊருக்கல்ல போவணும்ஞக இவரு" என்ருள்.

உஸ்மானுக்குக் கோபம் பொங் கிக் கொண்டு வந்தது. "ஆமாம் அந் தக் குடிக்கார நாயிக்கு ஊரு, ரம்ஸா னுன்னு வெச்சுக் கெடக்குதாக்கும்" என்று இரைந்தான். மறு நிமிஷம் ஒரு முரட்டுக்கை பிடரியைப் பிடித் துத் தலையை டங் கென்று சுவரில் மோதிற்று. "எலே! பார்த்துப் பேசு குடிகார நாயி நீயா,நாஞ?" அப்துல் லாவின் கடுங்குரல் பின்ஞல் கேட் டது. உஸ்மானின் கண்கள் தீக்கங் குகள் போல் சிவந்து விட்டன. ஏதோ சொல்ல வாயெடுத்தான். அதற்குள் "ஏ பாதிமா! பிள்ளையைத் தூக்கிட்டு நட வெளியிலே" என்று அப்துல்லா கர்ஜித்தான். மூலையில் பயந்தபடி நின்று கொண்டிருந்த சிறுவனை எடுத்து இடுப்பில் வைத் துக் கொண்டு, நீர் நிறைந்த விழிகளு டன் தந்தையை எறிட்டு நோக்கி ஞள் பாதிமா. உஸ்மானின் குரல் தழுதழுத்தது. பாதிமா தேம்பிஞள். அஸீம் வெருண்டு அழ ஆரம்பித்தான்.

"உம் ஜல்தி!" என்று துரிதப் படுத்தியபடியே "இந்தா நீகொடுத்த சீதனம்" என்று, உஸ்மான் நிக்கா வின்பொழுது தைத்துக் கொடுத்த குல்லாவை மூலையில் வீசி எறிந் தான் அப்துல்லா.

"பாதிமா! இந்த வூட்டை விட் டுட்டு....." என்று ஆரம்பித்தான் உஸ்மான்.

"வூடுமில்லே, ஊருமில்லே. சுல்லாவித்துக் குடிக்கிற நாய்களா நட!" என்று அடித்தொண்டையிலிருந்து கத்தினான் அப்துல்லா. பாதிமா கடைசி முறையாகத் தந்தையைத் திரும்பிப்பார்த்துவிட்டு நடந்தாள்.

பெரிய பண்ணையாரின் மகனுக்குப் பாம்பு கடித்து விட்டதாக அழைப்பு வந்திருந்தது. உஸ்மான் போயிருந்தான். எப்பொழுதும் போல் இம்முறையும் அவன் மந்திரத்திற்கும், சிகிச்சைக்கும் விஷம் கட்டுப்பட்டு இறங்க ஆரம்பித்தது. தன் காரியமெல்லாம் முடிந்து வெளியே வந்தவுடன் உஸ்மானுக்கு உலகமே சூன்ய மயமாய்த் தோன்றியது. தெரு முனையில் போய் உட்கார்ந்து கொண்டான். தனது அருமை மகள் பாதிமா இருக்குமிடத்திலிருந்தும், அவளைப் பார்க்க முடியாதபடி செய்துவிட்ட அல்லாவின் செயலை சிறிது நொந்து கொள்ளத்தான் வேண்டி யிருந்தது.

அஸ்தமித்து ஒரு நாழியாகி விட்டது. இடியாப்பம் விற்றுக் கொண்டிருந்தாள் ஒரு கிழவி. அதை வாங்கித் தின்று விட்டு, கொஞ்சம் சுடு தண்ணீரும் வாங்கிக் குடித்தான். சிறுவர்கள் சிலர் விளையாடியவாறே வீடு திரும்பிக் கொண்டிருந்தனர். அசீமின் நினைவு வந்தது. அதைத் தொடர்ந்து துக்கம் பீறிட்டுக் கொண்டு வந்தது. கால்கள் அவன் உத்தரவின்றியே பாதிமாவின் வீட்டை நோக்கி விரைந்தன.

பாத்திரங்கள் உருளும் சப்தம். பாதிமாவின் தேம்பல், அசீமின் "பாபா!" என்ற அலறல்-எல்லாம் ஒருங்கே உஸ்மானின் காதுகளில் மோதின. தாளிடப்படாத கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான். "அப்துல்லா!" அவனையும் அறியாமல் கூவினான்

"ஏலே நீயா ஹா—ஹா—ஹா" என்று கொக்கரித்தான் அப்துல்லா. விசும்பிக் கொண்டிருந்த அசீம், உஸ்மானைக் கண்டதும் "நானா" என்று பாய்ந்தான். "ஏ நாயே, நில்லு அங்கே!" அப்துல்லா அசீமை அடிக்கக் கையை ஓங்கினான்.

"அல்லா பேருலே ஆணையிட்டுச் சொல்றேன். நீ அசீம்மேலே கையை வச்சயோ அவரு சகிக்க மாட்டாரு" என்று ஆவேசம் வந்தவன்போல் கூக்கூரலிட்டான் உஸ்மான். ஓங்கிய கையைத் தாழ்த்தி சீ "வெளியிலே



போ. இது உன் வூடா சைக்தானே'' என்று கூறிக் கொண்டே அவன் சற்றும் எதிர்பாராத சமயம் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளிக் கதவைத் தாளிட்டான் அப்துல்லா.

## 3

அன்றுதான் ரம்ஸான் தினம்.

கடையில் ஆப்பங்களைக் கொண்டு வைத்துவிட்டு வீதியிலுள்ள வேடிக்கைகளை பார்த்தவாறே தளர்ந்த நடையுடன் திரும்பிவந்து கொண்டிருந்தான். ''அசீம்!'' அழைப்பு வந்த திக்கை நோக்கினுன். மாடி வீட்டினருகே நாலைந்து சிறுவர்கள் நின்று பேசிக் கொண்டிருந்தனர். இவனுக்குப் பழக்கமான ரஹீமும், கரீமும் அவர்களிடையே யிருந்தனர். அவர்களை நெருங்கினுன். ''அசீம், இந்த அழுக்குக் குல்லாவை இன்னிக்குக் கூட விட மாட்டியா?'' என்ருன், ஜரிகைக் குல்லா அணிந்திருந்த ரஹீம். மற்றவர்கள் கொல்லென்று சிரித்தனர். அசீமின் கன்னங்கள் உள்ளத்தின் பிரதிபலிப்பாகச் சிவந்தன ''இவன் நாஞ குல்லாக்கடை உஸ்மான்ஸாவுக்கே இந்த அழுக்குக் குல்லாதானே'' என்று கண்ணைச் சிமிட்டினுன் மற்ருெருவன்.

வீட்டை அடைந்ததும் அசீம் கூடையைமூலையில்எறிந்துவிட்டு தாயினருகே சென்று ''அம்மா'' என்ருன் விம்மல்களுக்கிடையே. ''என்ன அசீம்?'' புகையினுல் துன்புறுத்தப்பட்ட தன் சிவந்த விழிகளை அவன்பால் திருப்பினுள். அழுக்குக் குல்லாவை சுட்டிக் காட்டி ''எனக்கு ஏனம்மா ஜரிகைக்குல்லா இல்லே?'' என்று தேம்பினுன் குழந்தை.

தாயார் மௌனம் சாதித்தாள்.

''அம்மா! நாமே நாஞகிட்டே போயிடுவோமே. குல்லா தைச்சுத் தருவாரு.'' அவன்முகத்தில் ஆவல் பிரதிபலித்தது. தாயின் கண்கள் நீரைக் கக்கின.

அன்று உஸ்மான் ஆணையிட்டது போல் அப்துல்லா அசீமின் மேல் கையை வைத்ததை அல்லா சகிக்கவில்லை. அன்றுஇரவு, உடம்பு நெருப்பாகக் கொதித்துக் கொண்டிருந்தது. புலம்பலும், அதிகமாக யிருந்தது.

''ஜரிகைக்குல்லா அம்மா.'' குழந்தையின் கண்களில் கண்ணீர் பெருகிற்று.

''நாஞ தைச்சுத் தருவாருடா கண்ணே!'' அவன் முகத்தோடுமுகம் பதித்து முத்தமிட்டாள். சிறுவன் திருப்தியுள்ள ஒரு இளநகை—பூரிப்புள்ள உணர்ச்சி நிறைந்த ஓர் இளநகை—புரிந்தான். பாதிமாவின் இல்வாழ்க்கையில் மினுக் மினுக் கென்று மெல்லிய ஒளிவிட்டு பிரகாசித்துக் கொண்டிருந்த நம்பிக்கை தீபம் அணைந்துவிட்டது!

* * *

''அசீம்! அசீம்!'' ஒரு சிறு அட்டைப் பெட்டியுடன் வாசலில்நின்று கொண்டு உசேன் கூப்பிட்டான்.

''பீபி! அசீம் எங்கே? அவன் நாஞ ஜரிகைக்குல்லா ரம்ஸானுக்காக அவனுக்குக் கொடுத்தனுப்பிச்சிருக்காரு.''

கதவிடுக்கில் தெரிந்த கண்கள் மறைந்து விட்டன. நீண்ட விம்மல்களும், பொருமல்களும் கேட்டன.

''பீபி!''

''பாயி ! அசீம் அல்லாவிடம் ஜரிகைக்குல்லா வாங்க ரம்ஸானன்னிக்குப் போயிட்டான்.''

''என்ன?'' உசேனின் கையிலிருந்த அட்டைப் பெட்டி கீழே விழுந்தது.

## 4

கடையின் கதவைத் திறந்து உள்ளே நுழையும்பொழுது தலை டண்ணென்று நிலைப்படியில் மோதிற்று. உஸ்மான் கீழே சிந்திய ரத்தத் துளிகளை வெறித்து நோக்கினான்.

''ஜீ அஸ்ரத்!'' உசேன் கையில் ஒரு அட்டைப் பெட்டியுடன் நின்று கொண்டிருந்தான். அவன் முகம் வெளுத்திருந்தது.

'என்ன பாயி?' என்றான் உஸ்மான் ஆதுரம் பொங்கும் விழிகளுடன்.

''அசீமை அல்லாஉங்ககிட்டேந்து அளைச்சுக்கிட்டாரு'' என்றான் குனிந்த தலையுடன்.

''பாயி! எனக்கு என்னமோ செய்யுது. கொஞ்சம் தலையைப்பிடி'' என்று தலையை இரு கைகளாலும் தாங்கிக் கொண்டான்.

''பாயி! அவ துன்பப் படவே பொறந்தா, துன்பப்படுறா'' என்றான் மார்பை அழுதிப் பிடித்தவாறு.

''பாயி! கடைசியிலாவது அவனுக்கு ஜரிகைக்குல்லா போட்டுக் கிடக் கொடுத்து வெச்சுதே.

''அவனுக்குப் பொருத்தமா இருந்திச்சா குல்லா?''

தன்னுடைய தவறுதலினால் ஏற்பட்ட ஒரு சோகக் கட்டத்தை அனுபவிக்கக் கூடிய திடம் அவனுக்கு இல்லை. ''பாயிஸாப்! போய்வரேன் எல்லாம் அல்லா செயல்'' என்று கூறியவாறே உஸ்மானுக்குத் தெரியாமல் பெட்டியை எடுத்துக் கொண்டு மெதுவாக நழுவினான்.

● ● ●

## பழைய கதை ○ அழியாத கருத்து



ஒரே ஒரு சித்திரக்காரன் இருந்தான். அவன் எழுதிய படங்களை உலகம் புகழ்ந்தது. ஆனால் அவன் எழுதிய எந்தப் படமும் அவனுக்குத் திருப்தியளிக்கவில்லை. அவன் சிநேகிதனுக்கு ரொம்பவும் ஆச்சரியமாகி விட்டது. ஒருநாள் சித்திரக்காரன், ஒரு படம் எழுதி முடித்தான். ''உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் இந்தத் தெய்வீக சித்திரம்கூட உனக்குத் திருப்தியளிக்கவில்லையா?'' என்று கேட்டான் சிநேகிதன். சித்திரக்காரன் தலை கவிழ்ந்தான். அவன் முகம் வாடியது. ''இந்தப் படம் எனக்கு ரொம்பத் திருப்தியாக இருக்கிறது'' என்று கூறினான் சித்திரக்காரன்.

''பின் என் துக்கத்தோடு இருக்கிறாய்?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான் சிநேகிதன்.

''ஏனெனில், என் கலையைப்பற்றிஎனக்கு அதிருப்தி—குறை—இருந்தால்தான் மேலும் முயற்சிசெய்து கலையை அபிவிருத்தி செய்து கொள்வேன். எப்பொழுது இந்தத் திருப்தி ஏற்பட்டுவிட்டதோ, அப்பொழுது என் கலையின் உச்சானிக்கு வந்துவிட்டேன் என்று அர்த்தம். இனிமேலே, நான் முன்னேற முடியாதென்று நினைக்கும் போதுதான் துக்கம் உண்டாகிறது'' என்றான் சித்திரக்காரன்.



# பாலைவனமா



இரவு மணி ஏழு ஆகிவிட்டது. மெதுவாக பார்க்கை விட்டுப் புறப்பட்டு புருஷோத்தமன் வீட்டை நோக்கிவந்தான். அந்த நடையில் விவரிக்க முடியாத தளர்வும் தயக்கமும் தோன்றின.

எந்த வீட்டை அடைய முன்பெல்லாம் ஐந்து மணி ஆனதும் ஆகாததுமாக அவன் கிளம்புவானோ, எந்த வீடு அவனது உயிர்நிலையாகவும், குதூகலத்தின் இருப்பிடமாகவும் இருந்ததோ, அது இப்பொழுது வேம்பாகக் கசந்துவிட்டது. எதற்காக வீட்டுக்குப் போகவேண்டும், ஏன் போகவேண்டும்- என்று ஒவ்வொரு கணமும் அவனுக்குத் தோன்றியது. போகாமலே இருந்து விடலாமென்றாலோ அதுவும் முடியாமலல்லவா போய்விட்டது? முன்பெல்லாம் அவனது ஆருயிர் மனைவி ஜானம்மா ஐந்துமணி ஆனதும், வாசலில் அவன் வரவை எதிர் நோக்கிக் காத்திருப்பாள்.

இப்பொழுது அவன் வரவை நோக்கிக் காத்திருப்பவர் யார்? ஜானம்மா போய் ஒரு வருஷமாகி விட்டது. உலகத்தையே நரகமாக்கிவிட்டு, வாழ்வையே சுமக்கமுடியாத பாரமாக்கிவிட்டு, அவள் திடீரென்று கண்ணை மூடி விட்டாள். அவள் ஓடியாடிக் குதூகலித்த வீட்டில், அவளது வளையல்களின் எதிரொலி இன்னும் மறையாத வீட்டில், அவன் வாழ எப்படி மனம் சம்மதிக்கும்?

அந்த வீட்டையே விற்றுவிட்டு கண்காணாத இடத்துக்குச் சென்று சன்னியாசியாக வாழலா மென்று எத்தனையோ தடவை அவன் சங்கற்பம் செய்ததுண்டு, ஆனால் நிறைவேறாதபடி செய்து அது வந்த ஒரு ஆத்மாவும் அதே வீட்டில் இருக்கத்தான்செய்தது.

அது யாரென்றால், புருஷோத் தமனின் சகோதரியான வனஜா. ஜானம்மாவுக்கு அடுத்தபடியாக அவன் வாஞ்சைக்குப் பாத்திர மானவள் வனஜா. சிறுவயதிலிரு ந்தே சகோதரியின்பேரில் புரு ஷோத்தமன் உயிரையே வைத்தி ருந்தான். வனஜா பரம சாது. சகோதரனைவிட்டுப் பிரிந்து அவள் இருந்ததே கிடையாது. சென்ற வருஷந்தான் தன் தங் கைக்குத் தடபுடலாகக் கல்யா ணம் செய்துவைத்தான். அதிரு ஷ்டவசமாக மாப்பிள்ளைக்கும் அதே ஊரில் வேலை கிடைத்தது. அதிலிருந்து மாப்பிள்ளையும் மைத்துனனும் ஒன்றாகவே அவ் வீட்டில் ஆனந்தமாக இருந்தார் கள். இந்த சமயத்தில்தான் ஜான ம்மா தனது ஆருயிர்க்கணவனை மோசம் செய்துவிட்டுப் போய்வி ட்டாள்.

.... முக்குத் திரும்பியதும், வாசல்விளக்கு போடப் பட்டிருப்பதைப் பார்த்தான். அவன் வரவை எதிர்பார்த்துப் போடப்பட்டிருக்கும் விளக்கு அது. புருஷோத்தமன் மெது வாகநடந்து ஹா லுக்குள் நுழைந் தான். வழக்கம்போல் வனஜா வும் ராஜுவும் தங்கள் அறையில் பேசிக்கொண்டிருந்தார்கள். வழ க்கம்போல் அவர்கள்சம்பாஷணை அவனைப்பற்றியே இருந்தது.

"ஏன், அண்ணா இன்னும் வர வில்லை?"

"ஏன் என்று தெரியவில்லை யே!"

.... புருஷோத்தமன் சிறிது அசையாமல் நின்றான். தன் தங் கைக்குத்தான் தன்மேல் எவ்வ ளவு வாஞ்சை! அவள் மனம் தன்னைக் காணாமல் எவ்வளவு வருந்துகிறது? மாப்பிள்ளை .... அடடா, மாப்பிள்ளை யென்றால் இப்படியல்லவா இருக்கவேண் டும்? ஒரு நாளைக்காவது, அவன் முகத்தைச் சுளித்துக் கொள்ள வேண்டுமே! "அண்ணா அண்ணா என்று எதற்காக இப்படி உயிரை விடுகிறாய்?" என்று ஒரு நாளைக் காவது கேட்கவேண்டுமே! கிடையாது.

காலடிச் சத்தத்தைக் கேட்டு வனஜாவும் ராஜுவும் வெளியே வந்தனர்.

வனஜா: "அண்ணா!"

ராஜு: "புரு!"

புரு: "மாப்பிள்ளை! என்ன சேதி?"

ராஜு: "ஏன் வருவதற்கு இத்தனை நாழி! இனிமேலாவது 6-மணிக்குள் வந்து விடுங்கள்!

வஸந்தன்

எங்களுக்கு எவ்வளவு கவலையாக இருந்தது தெரியுமா?''

புருஷோத்தமன் சாப்பிட்டு விட்டு(?) தன்னந் தனியாக மாடியில் போய் உட்கார்ந்து கொண்டான். பாழும் முழு நிலவு தன் கதிர்களை வாரி வீசியது. ஜானம்மாளின் ஞாபகம் அவனுக்கு எப்படி வராமலிருக்கும்? சட்டென்று கீழே வந்து தன் அறைக்கதவைத் தாட்பாள் போட்டுக்கொண்டான். எதிரே சுவரில் ஜானுவின் படம். சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டான். ஜன்னல் துணியில் ஜானம்மாள் போட்ட பூச்செடி!

எப்படி அவனுக்கு அந்த அறையில் இருப்புக்கொள்ளும்? மெதுவாகக் கிளம்பி வெளியே ஹாலுக்கு வந்தான். மாப்பிள்ளையின் அறையிலிருந்து தம்பதிகள் மெல்லிய குரலில் பேசிக்கொள்வது அவன் காதில் விழுந்தது.

ஆம்; இப்படித்தான் அவன் பல இரவுகளில் உல்லாசமாக ஜானம்மாவுடன் பேசிக்கொண்டிருந்திருக்கிறான். ஆனல் அவர்கள் பேசிக்கொண்டிருந்ததற்கும் இப்பொழுது இந்தத் தம்பதிகள் பேசுவதற்கும் எவ்வளவு வித்தியாசம்?

புருஷோத்தமனும் ஜானம்மாவும் மெய்மறந்து பேசிக்கொண்டிருப்பார்கள். பேச்சில் வேடிக்கை விளையாட்டும் குறும்புமாக விருக்கும். அவர்கள் இருக்கிற இடத்தில் சிரிப்பும் கொம்மாளமும்தான். ஆனல் .... ராஜுவும் வனஜாவும் கீழ் ஸ்தாயியிலேயே எப்பொழுதும் பேசுகிறார்கள். அவர்கள் சிரித்துப்பேசி அவன் ஒருநாள் கூடக்கேட்டதில்லையே! இளம்பருவத்தின் மலர்ச்சிரிப்பை அவன் அவர்கள் முகத்தில் ஒருநாளும் பார்த்ததில்லையே! ஏன்?

அவர்கள் இப்படியிருந்ததற்கு என்ன காரணம் என்று புருஷோத்தமனுக்குத் தெரியும். அவர்கள் உல்லாசமாக வாழ்க்கை நடத்தாமலிருப்பதற்குக் காரணம் அவன் தான்! அவனே தான்! அண்ணா மனைவியைப் பிரிந்து வாழும் சந்தர்ப்பத்தில் தாங்கள் சிரித்து மகிழ்ந்துகொண்டிருப்பது கூடாது என்றல்லவா அவர்கள் இப்படிச் சந்தோஷமற்ற வரண்ட வாழ்க்கை நடத்துகிறார்கள்!

ஒருநாள், புருஷோத்தமன் வெளியிலிருந்து வந்ததும், வெகு நாளைக்குப்பிறகு முதன் முதலாக தங்கையும் மாப்பிள்ளையும் தப்பித் தவறி அவர்கள் சிரித்துபேசிக் கொண்டிருப்பதை அவன் கண்டான். வெகுநாள்கழித்து தன் தங்கையிடமிருந்து வந்த அந்தக் கலீர்ச்சிரிப்பு அவன் இதயத்தைக் குளிரவைத்தது. ஆனல் உள்ளே நுழைந்தானே இல்லையோ, அவர்கள் சிரிப்பு உடனே நின்றது. நெருப்பை மிதித்துவிட்டவர்கள் போல் இவனைக்கண்டதும் தம்பதிகள் இருவரும் துடித்துப்போனார்கள்: "ஆஹா! அண்ணா வருவது தெரியாமல்இப்படிச்சிரித்து விட்டோமே! பழைய ஞாபகங்

கள் வரச்செய்து மனசைத் துன்பப்படுத்தி விட்டோமே'' என்றுசொல்வதுபோல்அவர்கள் முகம் மாறியது. சற்றுமுன் குதூகலம் தாண்டவமாடிய அறையில் இப்பொழுது ஸ்மசானத்தை ஒத்த அமைதி நிலவியது.

புருஷோத்தமன் வீட்டை விட்டுப்போக நினைத்ததற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. முதலாவது, அப்பொழுதுதான் ஜானம்மாவைக் கொஞ்சமாவது மறக்க முடியும். இரண்டாவது, தான் வெளியேறிவிட்டால் தங்கையும் மாப்பிள்ளையும் சந்தோஷமாக வாழ்க்கை நடத்துவார்கள். அவன் வீட்டில் இருக்கும்வரை அவனுக்கும் நிம்மதியில்லை. தங்கையின் வாழ்க்கையும் குட்டிச் சுவர்தான்.

2

கொஞ்ச நாளாவது அவ் வீட்டைவிட்டுத் தனியாக இருக்க வேண்டும் என்று அவன் உள்ளம் துடித்தது. இதனால் அவன் வெளியூருக்கு மாற்றிக் கொள்வதற்காகப் பெரும்முயற்சி செய்தான். பலன் இல்லை. லீவு எடுத்துக்கொண்டு இரண்டு மாதமாவது கண் காணாத இடத்திற்குப் போயிருக்கலாம் என்று நினைத்தான். லீவும் கிடைக்கவில்லை. புருஷோத்தமன் என்ன செய்வான், பாவம்!

---



## நீங்கள் வாலிபர்தானா?

1. குழந்தைகளைக் கண்டால் உங்களையறியாமல் உங்கள் மனம் மலருகிறதா?
2. தினமும் ஒரு தடவை நீர் தேகப்பயிற்சி ஏதேனும் செய்கிறீரா?
3. எப்பொழுதும் வித்தியாசமில்லாமல் எல்லோருடனும் பழகும் இனிய சுபாவம் உங்களுக்கு இருக்கிறதா?
4. குறைந்தது ஒரு மணி நேரத்தில் ஒரு தடவையாவது கலீரென்று உம்மால் சிரிக்க முடியுமா?
5. புதிய புத்தகம், புதிய பத்திரிகை முதலியவற்றைப் படிக்க வேண்டுமென்ற ஆவலும், புதிய கருத்துக்களை மனதில் பதித்துக்கொள்ள வேண்டுமென்ற மனநிலையும் உங்களுக்கு உண்டா?

இவ் கேள்விகளுக்கு 'ஆம்' என்று பதில் சொல்ல முடிந்தால் உமக்கு எவ்வளவு வயதானாலும் நீர் ஒரு இளைஞர்தான்! —'பரேட்'

அவனுக்குக் கடைசியாக ஒரு யுக்தி தோன்றியது. மாப்பிள்ளையுடன் எப்படியாவது சண்டை போட்டுக் கொண்டால் அவனுக்குத் தன் பேரில் வெறுப் உண்டாகாதா? இதனால் அவனைத் தொலைத்துத் தலை முழுக வேண்டுமென்று அவனுக்கு தோன்றுமல்லவா? வனஜாவும் புருஷன் பக்கம் இருப்பதைத் தவிர வேறு வழியில்லை. அப்பொழுது அவன் தாராளமாக வீட்டைவிட்டு வெளியேறி தனியே யிருக்கலாமல்லா?

இந்த திட்டத்தை நிறைவேற்றுவதற்காக, பலதடவை வேண்டுமென்றே ராஜுவை வலுச் சண்டைக்கு இழுப்பான்.

எதற்கெடுத்தாலும் அண்ணா சண்டை பிடிப்பதை வனஜாவும் ராஜாவும் தெரிந்துகொண்டனர். இதனால் வெறுப்பு ஏற்படுவதற்கும் பதிலாக, அவன்மேல் இரக்கம் தான் ஏற்பட்டது. "ஐயோ, பாவம்! அண்ணா மனசு ரொம்பவும் உடைந்துபோய்விட்டது. அதனால்தான் இப்படித் தாறுமாறாகப் பேசுகிறார். நாம் தான் அவரைச் சமாதானப் படுத்தவேண்டும். நம்மைத் தவிர அவருக்கு வேறு யார் இருக்கிறார்கள்?" என்று தம்பதிகள் இருவரும் முடிவு கட்டினர். பலதடவை புருஷோத்தமன் சண்டைபோட்டுக்கொண்டு போய்விடுவான். இரவு $1\frac{1}{2}$-மணிக்குக் கூட தம்பதிகள் கண்விழித்துக்கொண்டு அண்ணாவைக் காணோமேஎன்றுகாத்திருப்பார்கள். ராஜு புருஷோத்தமனைத் தேடிக்கொண்டு புறப்பட்டுவிடுவான். எங்கேயோ ஒருஇடத்தில் கண்டு பிடித்துச் சமாதானம் செய்து வீட்டுக்கு அழைத்து வருவதற்குள் போதும் போதும் என்றாகி விடும்.

3

வரவர, புருஷோத்தமனுக்கு வாழ்க்கை வெறுத்துவிட்டது. வரண்ட பாலைவனமாகிவிட்டது. வீட்டிலோ அடியெடுத்து வைக்க பிடிக்க வில்லை. தங்கையும் மாப்பிள்ளையுமோ அவனை விடுகிற வழியாக இல்லை. அவர்களது அன்புக் கொடுமையிலிருந்து தப்பிக்கொள்ள என்ன செய்வது?

இந்த சமயத்தில் தான் அவனுக்கு ஒரு அருமையான யோசனை தோன்றியது. தனக்குஉடம்பு சரியில்லை என்று ஆஸ்பத்திரியில் இரண்டு மாதகாலமாவது படுத்துக்கொண்டால் என்ன? பேஷ், அதுதான் சரியான யோசனை! கொஞ்ச நாளைக்காவது வீட்டுப் பக்கம் போகாமலிருக்கலாம். டாக்டரைப் பார்த்துத் தன் விருப்பத்தைச் சொல்லி, தன் மனிதர்கள் யாருமே தன்னைப் பார்க்க முடியாதபடி செய்துவிடலாம்.

அவ்விதமே டாக்டரைப் பார்த்தான். தன் கதை முழுவதையும் கூறினர். அவன் விருப்பம் நிறைவேறியது. மறுநாள் அவன் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டான். இப்பொழுது டாக்டர்கட்டளைப்



படி வனஜாவோ ராஜகோபால
னோ அவனைப் பார்க்க வரமுடிவ
தில்லை. பெரிய குஸ்திப் பந்தயத்
தில் ஜயித்து விட்டவன் போல்
புருஷோத்தமன் ஆனந்தப்பட்டா
ன். சிறையிலிருந்து விடுபட்ட
பட்சியைப்போல் அவன் உள்ளத்
தில் குதூகலம் பாய்ந்தது.

கொஞ்சகாலத்திற்காவது தன்
நினைவு இல்லாமல் தங்கையும்
அவள் புருஷனும் சந்தோஷமா
யிருப்பார்களல்லவா ? - என்ற
நினைவு அந்தக் குதூகலத்தை
அதிகப்படுத்தியது.

அவன் ஆஸ்பத்திரிக்கு வந்த
அன்று சாயங்காலம் அவனைத்
திடுக்கிடவைத்த சம்பவம் ஒன்று
நடந்தது. அவனைப் பரிசோதனை
செய்ய வந்த டாக்டர் லலிதாவை
பார்த்து புருஷோத்தமன் திடுக்
கிட்டுப்போனான். ஜானம்மாதான்
மறுபடியும் அவன்முன் உயிர்
பெற்று வந்து விட்டாளோ ?
அல்லது தன் உயிர்போய் விண்
ணுலகத்தில்தான் ஜானம்மா
வைச் சந்திக்கிறானோ ?

தினமும் லலிதா தன்னருகில்
வந்து பேசிக் கொண்டிருக்
கும்போது விவரிக்க இயலாத
உணர்ச்சியை அடைந்தது அவன்
மனம். ஜானம்மா ஞாபகம் இல்
லாம லிருக்க வேண்டுமென்று
ஆஸ்பத்திரியில் வந்து ஒளிந்து
கொண்டால், இங்கேயும் விதி
அவனை விடமாட்டேன் என்கிற
தே என்று அதிசயித்தான்.

அடிக்கடி லலிதா அவனுடன்
பேசிக்கொண்டிருப்பாள். "ஏன்
டாக்டர், உங்களை நான் எப்பொ
ழுதும் ஆஸ்பத்திரியிலேயே பார்க்
கிறேனே! உங்களுக்கு வீடுவாசல்
ஒன்றுமே இல்லையா?" என்று
ஒருநாள் புரு விசாரித்தான்.

"வீட்டுக்குப் போகவே எனக்கு
இஷ்டமில்லை."

"ஏன்?"

"நாம் பிறர் சந்தோஷத்தை
ஏன் கெடுத்துக் கொண்டிருக்க
வேண்டும்?"

"பிறர் என்றால் யார்?"

"என் தங்கை தான்."

"அவள் சந்தோஷத்தை எப்படி நீங்கள் கெடுக்கமுடியும் ?"

லலிதா தன் கதையைச்சொன்ணுள். அவள் ஒரு விதவை. கணவன் சில வருஷத்துக்குமுன் இறந்து போனுன். சொந்தத் தங்கையும் அவள் கணவனும் அவளை வீட்டில் இருக்கச் சொல்லி உபத்திரவம் படுத்துகிருர்கள். என்ன இருந்தாலும், விதவைப் பெண் உள்ள வீட்டில் துக்கத்தின் சாயை இருந்து கொண்டுதான் இருக்கும். யாரும் சந்தோஷமாக இருக்கமுடியாது.

புருஷோத்தமனுக்கு ஆச்சரியமாயிருந்தது. தனக்கும் லலிதாவுக்கும் ஏற்பட்டிருக்கும் ஒற்றுமையை நினைத்து ஆச்சரியப்பட்டான். அவன் மனதில் பல புதிய எண்ணங்களும் கவலைகளும் ஏற்பட்டன.

அவ்வப்பொழுது லலிதா பார்க்கும் பார்வை, பேசும் பேச்சு எல்லாம் அவனை என்னமோ செய்தது. ஜானம்மாவை முன்பு மறக்க நினைத்தான். இப்பொழுதோ, "ஜானம்மா இப்படித்தான் செய்வாள்; அப்படித்தான் நடப்பாள். கைவீச்சு, பின்னல், கடைக்கண் பார்வை, சிரிப்பு எல்லாம் அவளையே உரித்துவைத்திருக்கிறதே" என்று டாக்டரைப் பார்க்கும் போதெல்லாம் நினைப்பான்.

ஒருநாள் லலிதா அவன் ஹிருதயத்தைப் பரிசோதனை செய்துவிட்டு அவனைப் பார்த்த பார்வை புருஷோத்தமனை பெருமூச்செறியச்செய்தது. "அவளும் ஒரு விதவை,........" என்ற எண்ணம் முதன் முதலாக அவன் உள்ளத்தில் பிறந்தது.

## 4

சிலநாட்கள் கழித்து புருஷோத்தமன் ஆஸ்பத்திரியை விட்டு வெளியே வந்தான். வெளிவரவே அவனுக்குச் சம்மதமில்லை. தங்கையும் மாப்பிள்ளையும் அவன் வரவை எவ்வளவு கொண்டாடினுர்கள் என்று சொல்ல வேண்டியதில்லை.

வந்து சில தினங்கள் வரை புருஷோத்தமன் குதூகலமே இல்லாமல் இருந்தான். அவன் மனம் எதையோ நினைத்து ஏங்கியது.

"அண்ணு ! உடம்பு மறுபடியும் சரியில்லைபோலிருக்கிறது ! என் சிநேகிதி லலிதாவை வந்து பரீட்சித்துப் பார்க்கச் சொல்லட்டுமா ?" என்ருள் வனஜா

புருஷோத்தமனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. "யார்? உன் சினேகிதியா ?" என்று கேட்டான். அவன்

"ஆம் அண்ணு! அவளுக்கு தங்கள் மாப்பிள்ளை ஊராம். அவருக்குப் பக்கத்து வீடாம். இவர் லலிதாவை ஒரு நாள் எனக்கு அறிமுகப் படுத்திவைத்தார். நீங்கள் ஆபீஸ் போயிருக்கும்போது அவள் இங்கே அடிக்கடி வருவதுண்டு."



“ஏன் ஸார் தினமும் இப்படிக் கஷ்டப் பட்டுக்கொண்டு மோட்டாரைத் தள்ளிக்கொண்டு போகிறீர்கள்?” “என்ன செய்வது? இந்த ஊரில் காரில் போனால்தான் கௌரவம். ஆகையால் தான்!”

---

“பாவம் அவள் ஒரு விதவையாம்!”

“விதவையுமில்லை, மண்ணாங்கட்டியுமில்லை. காரியத்தைச் சாதித்துக்கொள்வதற்கு, பெரிய பொய்யாகச் சொல்லியிருக்கிறாள்!”

நிஜந்தானா “அவள் உனக்கு ஏற்கனவே தெரிந்தவளா? என் விஷயம் முழுதும் நீதான் அவளிடம் சொல்லி யிருக்கிறாயா? அவள் சொன்ன தெல்லாம் பொய்யா? அவள் கண்கள் கூடவா பொய் சொல்லும்,” என்று ஆவலுடன் கேட்டான்.

“விதவை என்பது மட்டும் பொய் பாக்கி எல்லாம் நிஜமோ பொய்யோ எனக்கு தெரியாது. ஆனால் உங்கள் பேச்சை எடுத்தாலே அவள் முகம் சிவந்து எப்படி எப்படி யெல்லாமோ மாறுகிறது.”

வனஜா குறும்புச் சிரிப்புச் சிரித்தாள். புருஷோத்தமனும் ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். “பெரிய பொய்குளியாக இருக்கிறாளே! இப்படித்தான் ஜானுவும் ஏதாவது பொய் சொல்லுவாள்!” என்று ஆச்சரியத்துடன் கூவினான் புருஷோத்தமன். சில மாதத்துக் கெல்லாம் ஸ்ரீமான் புருஷோத்தமனுக்கும் டாக்டர் லலிதாவுக்கும் திருமணம் நடைபெற்றது. இப்பொழுது அவன் வாழ்க்கையை யார் பாலைவனம் என்று சொல்ல முடியும்?

---



சில பிரதிநிதிகளுடன் ஸ்ரீமதி ஸரோஜினி தேவி ஜம்மென்று நிற்கிறார்!

## ● ● உலகிற்கு

உலகசரித்திரத்தில் ஒரு புதுமை. பழம் பெரும் பாரத நாட்டின் பண்டைச் சிறப்பு புத்துயிர் பெற்றெழுந்ததுபோல் அற்புத சம்பவம் நமது காலத்தில் நிகழ்ந்தது. அதுதான் ஆசிய உறவு மகாநாடு. டெல்லியிலுள்ள "புராணக்கிலா" என்னும் கோட்டையினுட்புறத்தில்ஆசியா கூடியது. இக்கோட்டை எழுநூறு வருஷங்களுக்கு முன்பு கட்டப்பட்டதாம். அதன் சிதைந்த மதில்கள் பாரத நாட்டின் பண்பாட்டையும், வீரச் செயல்களையும் கட்டியம் கூறி நிற்கின்றன.

இந்தக் கோட்டையினுட்புறத்தில் பிரம்மாண்டமான பந்தல் அரை வட்ட வடிவத்தில் அமைந்திருந்தது.

வீராதி வீரர்களும், மன்னாதி மன்னர்களும் பிரவேசித்த இந்தக் கோட்டை வாயிலில் இந்த இருபதாம் நூற்றாண்டின் பத்தாயிரத்துக்கும் அதிகமான மக்கள் ஆர்வத்துடனும், உத்ஸாகத்துடனும் பிரவேசித்த காட்சியை என்றென்றும் மறக்க முடியாது.

பந்தலில் முதன் முதலாக மக்களின் கவனத்தைக் கவர்ந்தது "ஆசியா" என்ற ஒளி எழுத்துக்கள் அரங்கத்தில் ஒளிர்ந்த இந்த ஒளி எழுத்துக்களின் கீழே ஆசியா கண்டத்தின் தேசபடமொன்று தொங்கவிடப்பட்டிருந்தது. இருபதடி உயரமிருந்த இந்த ஆசியா கண்டத்தின் படத்தில் ஆசியாவின் பலவேறு நாடுகளும் அவற்றைத் தன்னுள் அடக்கிக் கொண்ட ஆசியாவின் எல்லைக்



சில திபேத் பிரதிநிதிகள்

# ஒரு புதுமை

—"கஜமுகன்"

கோடும் குறிப்பிடப்பட்டிருந்தன. படத்தின் இரு பக்கங்களிலும் ஆசியாபற்றிய புள்ளி விவரங்கள் கொடுக்கப்பட்டிருந்தன. இவைகளை அடுத்து பதினெட்டுத் தேசத்துக் கொடிகள் இரு மருங்கிலும் வர்ண ஜாலங்களை வீசிக் கொண்டிருந்தன. ஆனால் பாரதத் தாய்க்கு மந்திரம் ஒரு கொடி அங்கில்லாமல் போனது ஒரு பெருங் குறைதான்.

இந்த வர்ண ஜாலக் கொடிகளுக்குக் கீழே அக்கிராஸனர் பீடமும், பல நாட்டுப் பிரதிநிதிக் கோஷ்டித் தலைவர்கள் ஆசனங்களும் அமைந்திருந்தன. அரங்கத்தின் சுவர்ப் புரங்களில் மற்ற நாடுகளின் கொடிச் சின்னங்கள் விளங்கின.

மகா நாட்டுக்கு வந்திருந்த ஜனத்திரளோ சொல்லி சொல்லி முடியாது. குறிப்பிட்ட நேரத்தில் பிரதிநிதிகள் கோஷ்டிகள் வரிசையாகப் பந்தலுக்குள் பிரவேசித்தன. மகாநாட்டு அக்ராஸனரும், பாரதநாட்டுப் பெண் திலகமுமான கவியரசி ஸ்ரீமதி ஸரோஜனி நாயுடு முன் செல்ல, ஆப்கனிஸ்தான், ஆர்மீனியா, அஸர்பைஜான், பூடான், பர்மா, இலங்கை, என்று ஆங்கில அரிச்சுவடி வரிசைப் பிரகாரம் பிரதிநிதிகள் வந்தார்கள். ஒவ்வொரு தேசத்தவரின் உடையும் ஒவ்வொரு விதம்! அவரவர் அந்தந்த நாட்டுப் பாணியில் உடுத்தியிருந்தார்கள்.

ஸ்ரீமதி ஸரோஜனி நாயுடு பேசிய பிறகு பலவேறு நாட்டுப்

பிரதிநிதிகளின் தலைவர்கள் ஒருவரை யடுத்து ஒருவராகப் பேசினார்கள். அநேகமா எல்லாப் பிரதிநிதிகளும் முதலில் தங்கள் தாய் பாஷையிலும் பிறகு ஆங்கிலத்திலும் பேசினார்கள். ஒவ்வொரு பாஷையையும் கேட்கும்போது, வேடிக்கையாகவும் குதூகலமாகவும் இருந்தது. பல வேறு பாஷைகள் ஒன்றன் பின் ஒன்றாக ஒலித்து அந்தக் கோட்டை மதிலிக்குள் ஒன்று சேர்ந்து "ஐக்கிய ஆசியா" என்ற ஒரே பாஷையுடன் வெளிப்போயிற்று. ஆம்; அங்கு பாஷைகள் தான் விதவிதமாகப் பேசப்பட்டதே தவிர குரல் ஒன்றே தான். அது தான் ஐக்கிய ஆசியாவின் குரல்! மலைகளும், கடல்களும், நாடுகளைப் பிரித்திருக்கலாம். ஆனால் ஆசியாவை என்றும் பிரிக்க முடியாது. அதன் மக்கள் எல்லோரும் ஒன்று. ஒவ்வொரு பிரதிநிதியின் வாயினின்றும் அந்தக் கூட்டத்தில் இதே அபிப்பிராயம்தான் வெளிவந்தது.

ஏப்ரல் இரண்டாந்தேதி மாலை பத்து நாள் அலுவல்களின் முடிவு தினம். மாபெரும் காரியத்தைச் சாதித்த பிரதிநிதிகள் பாரத மண்ணிலிருந்து விடைபெற்றுக் கொள்ளும் தினம்.

கடைசி நாள் கூட்டத்துக்கு மகத்துவம் அளிப்பதற்கென்று நமது நாட்டின் ஸ்வதந்திரத் தந்தை மகாத்மா காந்தியும், டச்சு ஆதிக்கத்தினின்று விடுதலைபெற்ற இந்தோனேஷியக் குடியரசின் தனிப்பெரும் தலைவர் டாக்டர் சுல்தான் ஷாரீரும் வந்திருந்தார்கள்

முதல் இரண்டு நாட்கள் பத்தாயிரத்துக்கும் சற்று அதிகமாக ஜனங்கள் வந்திருந்தார்கள். ஆனால் கடைசி நாளோ ஜனக் கூட்டத்தின் அளவு இருபத்தி ஐயாயிரத்துக்கும் அதிகமாகப் போய்விட்டது. கூட்டம் கட்டுக் கடங்காமல் இருந்தது. காந்திஜி வழக்கம்போல் ஒருவருக்கும் தெரியாத வகையில் உள்ளே நுழைந்தார். ஆனால் அவர் வரவை ஸ்ரீமதி ஸரோஜினி நாயுடு, இராணியப் பிரதிநிதி ராகம் போட்டுப் பேசிக்கொண்டிருப்பதை நடுவில் நிறுத்துவிட்டு, அறிவித்தார். சபையில் ஒரே ஆரவாரம்.

காந்திஜியின் ஸத்யபோதனையே உலகத்துக்கு ஆசியாவின் செய்தி. ஆசியாவின் மூலை முடுக்குகளிருந்தெல்லாம் வந்திருந்த பிரதிநிதிகளை, உலகுக்கு சத்திய நெறியையும் அன்பின் ஆட்சியையுமே பறையறிவிக்கும்படி, காந்திஜி கேட்டுக் கொண்டார்.

ஜவாஹர், "நமது வேலைகள் இனிமேல்தான் ஆரம்பமாகின்றன. அதற்குத்தான் இந்த ஆசிய ஸ்தாபனம்" என்று கூறி ஆசியாவின் வருங் காலக் கடமைக்கு அங்குரார்ப்பணம் செய்து வைத்தார்.

ஸ்ரீமதி நாயுடு "நாம் ஒன்றாக உதயத்தை நோக்கிச் செல்லுவோம்" என்று மகா நாட்டை முடித்து வைத்தார்.

தொடர் கதை :

—வஸந்தன்

# வைராக்கியம்

"எத்தனை நாழிகையாக இங்கே நிற்கிறாய்?" என்று முத்து கேட்டதும் மனோரமா முகத்தில் புன்னகை அரும்பியது. முத்துவின் கண்கள் அவன் எவ்வளவு அதிர்ச்சி யடைந்துவிட்டான் என்பதைக் காண்பித்தன.

"நீ கடிதத்தைப் பார்த்தாயா?"

"எந்தக் கடிதத்தை?"

"சரி! இப்படி உட்கார்....எல்லாம் சொல்கிறேன்."

முத்துவின் உடல் குப்பென்று வியர்த்தது. தேகமாத்தியந்தம் சொட்டச் சொட்ட நனைந்தது. அவன் கண்கள் சிவந்து கோவைப்பழம் ஆயின.

மனோரமா எதிரில் நாற்காலியில் தயங்கிய வண்ணம் உட்கார்ந்தவாறு "அண்ணா!... ஏன் இவ்வளவு கலவரம்? எந்தக் கடிதத்தை நீங்கள் குறிப்பிடுகிறீர்கள்?........"

முத்து என்ன காரணத்தாலோ பூமியைப் பிளந்துவிடுபவன் போல் கீழே பார்த்தான். பின்னால் இருந்து கொண்டு, மனோரமா அந்த ரகசியக்கடிதத்தின் நகலைப் பார்த்துவிட்டாளோ என்று அவன் நினைத்தான். ஆனால் அவள் அதைத் தன் சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டதுந்தான் உள்ளே வந்திருக்கிறாள் என்பதில் சந்தேகமில்லை. அவள் அதைப் பார்க்கவில்லை!!

"அண்ணா! எந்தக் கடிதம்?" என்று மீண்டும் கேட்டாள் மனோரமா.

முத்து நியாயமாகச் சட்டைப் பையிலிருந்து அந்தக் கடிதத்தை எடுத்து மனோரமாவிடம் கொடுத்திருக்கலாம். அதனால் ஏற்படக் கூடிய பலாபலனை அனுபவித்திருக்கலாம். ஆனால் இந்த சமயத்தில்தான் சற்றும் எதிர் பார்க்காத, ஆச்சரியமான ஒரு காரியம் செய்தான்.

"மனோரமா! நான் குறிப்பிட்டது, போலீஸார் கொண்டுவந்த வாரண்டை. என் வீட்டைச் சோதனை போடுவதற்காக போலீஸார் சில தினத்துக்கு முன் வந்தார்களென்று நான் அப்பொழுதே சொன்னேனல்லவா, வீரபத்ர பிள்ளை என் வீட்டிலேயே ஏதாவது சாமானைப் போட்டுவிட்டு, என்னைக் கைது செய்யும்படி ஏற்பாடு செய்வாரென்று நாம் நினைக்கவில்லையா?...." என்று கூறி மேஜை அறையிலிருந்து சோதனை வாரண்டை மனோரமாவிடம் கொடுத்தான்.



மனிதர்கள் செய்யும் சில காரியங்களுக்கு காரணத்தைக் கண்டுபிடிப்பதென்பது முடியாத காரியம். அவ்விதமே முத்து மனோரமாவிடம் ரகசியக் கடிதத்தை ஏன் காண்பிக்கவில்லை? அவ்விடம் அதைக் காண்பிக்கவேணுமென்று இத்தனை நாளாகத் துடியாய்த் துடித்துவிட்டு அதற்காக சென்னைக்குகூட ஓட்டமாக ஓடிவிட்டு இப்பொழுதுமட்டும் அதை அவளிடம் காண்பிக்காமல் மறைப்பானேன்? மனோரமா திடீரென்று பின்னால் வந்து அதைப் பார்த்திருப்பாளோ என்ற பயத்தினால் ஏற்பட்ட அதிர்ச்சியால் மூளை குழம்பி இப்படிச் செய்தானா? அல்லது வேண்டுமென்றேஇப்படிச்செய்ய வேண்டுமென்ற துர் எண்ணம் பளிச்சென்று அவன் மனதில் தோன்றியதா? இதை மனோதத்துவ ஆராய்ச்சிக்காரர்கள் தான் சொல்லவேண்டும். ஆனால் அதே சமயத்தில் அவன் உள்ளத்தில் விவரிக்க இயலாத ஒரு மனமாற்றம், பூகம்பத்தைவிடப் பெரிய அதிர்ச்சி ஏற்பட்டது



என்பதை மட்டும் ஒப்புக் கொள்ளவேண்டும்.

மனோரமா மேலும் கீழுமாக அந்தச் சோதனை வாரண்டைப் பார்த்துப் பெருமூச்செறிந்து விட்டு, அண்ணாவைப் பார்த்தாள்.

"அண்ணா! ..."

"ஏன்? ...."

எவ்வளவோ விஷயங்கள் பேச வேண்டுமென்று நினைத்துத்தான் மனோரமா அங்கே வந்தாள். ஆனால் அப்பொழுது என்ன காரணத்தினாலோ அவள் நா வெழவில்லை. மந்திரத்தால் கட்டுண்டவன்போல் முத்து உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாள்.

"அண்ணா! ஏன் இது? ஏன் முகம் இவ்வளவு கோரமாக இருக்கிறது?"

"இல்லையே!" என்று சிரிப்பது போல் பாவனை செய்தான்.

"இந்த சோதனை வாரண்டைப் பார்த்ததிலிருந்தா இப்படிப் பயந்து நடுங்கி விட்டீர்கள்? ஆட்சேபகரமான சாமான் ஒன்றும் சோதனையில் அகப்படவில்லையே. நீங்கள்தான் தப்பிக் கொண்டு விட்டீர்களே, அப்படியிருக்கும்போது நீங்கள் ஏன் இப்படி யிருக்கிறீர்கள்?"

"ஒன்றுமில்லையே, மனோரமா!"

"சென்னையில் டாக்டர் சுசீந்திரம் வீட்டில் தந்திவந்ததும் பூச்செடியைத் தாண்டி ஓட்டமாக ஓடினீர்கள். அப்பொழுது உங்களைப் பார்த்ததற்கும் இப்பொழுது பார்ப்பதற்கும் இவ்வளவு வித்தியாசம்? நடந்தது எல்லாவற்றையும் சொல்லுங்கள்!" என்று கேட்டாள் ஆவலுடன்.

முத்துக்குமாரு நடந்தவற்றைக் கொஞ்சமும் உணர்ச்சியின்றி, ஜட்ஜ் குற்றப் பத்திரிகையைப் படிப்பதுபோல் சொல்லிக் கொண்டு போனான். தான் முன்பு சொல்ல நினைத்ததை ஒன்றும் அவன் சொல்லவில்லை.

கந்தஸ்வாமி பிள்ளை வீட்டில் திருட்டு நடந்ததற்குக் காரணஸ்தர் வீரபத்ர பிள்ளை என்று அவர்மேல் பழியைத் தூக்கிப் போட்டான். தன்மேல் அவர் பழி வாங்குவதற்காக, அவர் போலீஸாரைத் தூண்டிவிட்டு, தன் வீட்டைச் சோதனைபோடச் சொல்லி யிருக்கிறார் என்று பொய் சொன்னான். தன் வீட்டில் யாரோ திருடர்கள் புகுந்து சில தட்டு முட்டு சாமான்களைத் திருடிப்போனதாகப் புளுகினான்.

இவ்வளவு பொய்யையும் அந்த அபலைப்பெண் மனோரமா நம்பி விட்டாள். முத்துவின் வார்த்தையைச் சந்தேகிக்க வேண்டிய காரணமும் அவளுக்கில்லை யல்லவா?

"அண்ணா! உங்களுக்கு ஏன் கஷ்டத்துக்கு மேல் கஷ்டமாக வருகிறது? உங்கள் வருத்தத்தை வெளியில் சொல்லக்கூட ஒருவர் இல்லாமல் எவ்வளவு கஷ்டப்பட்டீர்களோ. அண்ணா! இனிமேல் எதற்கும் கவலைப்படாதீர்கள். நான் இருக்கும்போது உங்களுக்குக் கவலை ஏன்? உலகமே சூழ்ச்சி செய்தபோதிலும், நம்மைப்பிரிக்க யாராலும் முடியாது. அண்ணா! உங்களை இத்தனை நாளாகப் பார்க்காமல் என் மனம் எவ்வளவு வேதனைப் பட்டது தெரியுமா? சுசீந்திரம் வீட்டில் படுத்த படுக்கையாக நான் இருந்தபோது, நீங்கள் வந்தீர்கள். உங்களைப் பார்த்ததுமே என் கவலை தீர்ந்தது. உடம்பும் குணமாகிவிட்டது. நீங்கள் தங்கியைப்பார்த்து விட்டு என்னைப் பிரிந்ததும் என் சந்தோஷமே போய்விட்டது. காலையில் உங்களை அப்பாகோபித்துக் கொண்டார். அப்பொழுது என் இதயத்தை யாரோ சம்மட்டியால் அடிப்பதுபோல் இருந்தது அண்ணா! இனிமேல் நம்மைப் பிரித்து வைத்துக் கடவுள் சோதிக்க மாட்டார்" என்றுமனம் கசிந்து கூறினாள்.

கள்ளங்கபடற்ற இதயத்திலிருந்து கிளம்பிய அந்த மொழிகள் முத்துவின் உள்ளத்தில் ஈட்டியைப் போல் பாய்ந்து விசித்திர வேதனையை உண்டாக்கின.

குப்பென்று அவன் கண்களில் நீர் சுரந்தது. கடல்மடைதிறந்தது போல் உணர்ச்சி பொங்கி அவனை நிலைகுலைய வைத்தது. "மனோரமா!" என்று அவன் ஏதோ சொல்ல வாயெடுத்தான்.

அந்த கணத்திலேயே அவன் ஒளிக்க நினைத்த பரம ரகசியத்தை அவளிடம் சொல்லிவிடுவானோ என்று தோன்றியது. அத்தனை நேரம் அவன் சொல்லாம லிருந்த குற்றத்துக்காக மனோரமாவின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்பானோ என்றும் தோன்றியது.

ஆனால்....அவன் வாய்திறந்து பேசவில்லை. திறந்த உதடுகள் மூடுவது போலிருந்தன. கனிந்த கண்களில் கொடிய பிரகாசம் வீசியது. குனிந்த தலை நிமிர்ந்தது. ஒரு விநாடியில் ஒரு

மனிதனின் முகம் இப்படி மாறு மாவென்று ஆச்சரியப்படும்படி அவன் முகம் மறியது.

மனோரமா ஏதேதோ பச்சைக் குழந்தை போல் பேசிக் கொண்டும் சிரித்துக்கொண்டு மிருந்தாள். இதெல்லாம் முத்துக் குமாருவை என்ன காரணத்தினுலோ சித்திரவதை செய்தது. குவாரித் தொழிலாளர்கள் போராட்டத்தை அவள் வர்ணித்தபோது, அவன் மனம் அதில் சிரத்தை கொள்ளவே யில்லை.

வெகு நேரம் ஏதேதோ பேசிக் கொண்டிருந்துவிட்டு, மனோரமா சென்றதும் முத்துக் குமாரு படுக்கையில் சாய்ந்தான்.

## 11. அரசியலில் சேராதே

பொன்னருவிக் கிராமத்தில் மைதானத்துக்குக் குறைவுகிடையாது. குவாரிக்கு அருகிலுள்ள ஒரு பெரிய மைதானத்தில் அன்றுமாலே சுமார் ஆயிரம் பேர்கள் கூடியிருந்தார்கள். பல தினங்களாகியும் குவாரி வேலே நிறுத்தம் முடியவில்லை. அவர்களின் தலைவர் மனோரமா வேலே நிறுத்த நிலைமையைப் பற்றிப் பேசுவதாக ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. அங்கு கூடியிருந்த தொழிலாளிகள் யாவரும் திரும்பித்திரும்பி ஒரு திசையையே பார்த்துக் கோண்டிருந்தார்கள். மனோரமா இன்னும் கூட்டத்துக்கு வாராதது தான் அதற்குக் காரணம்!

இவ்வாறு இவர்கள் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கழுத்தைச் சுளுக்கிகொண்டிருந்தசமயத்தில் ஒரு குவாரித் தொழிலாளியின் குடிசையில் ஒரு சிற சம்பவம் நடந்தது. அதாவது கொடியில் போட்டிருந்த எண்ணெய்ச் சிக்குப் பிடித்த ஒரு துண்டு மெதுவாகக் காற்றில் பறந்து கீழே யிருந்தஅடுப்பில் விழுந்தது. கூட்டத்துக்குப் போகிற அவசரத்தில் அடுப்பை அணைக்காமல் போய்விட்டதால், மெதுவாக துணியில் நெருப்புப்பற்ற, அதிலிருந்து பக்கத்திலுள்ள தேங்காய் நாரில் பற்ற, இந்தக்காலத்தில், ஸ்டிரைக் பரவுவது போல், நெருப்பு பரவ ஆரம்பித்து. தொழிலாளிகள் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்த திசையிலிருந்து திடீரென்று ஒரு புகை மண்டலம் மேலேகிளம்பியது.

"ஐயோ! நம்ப குடிசை போச்சு!" என்றான் ஒருவன்.

"ஐயோ! யாரோ நெருப்பை வச்சூட்டாங்க!" என்றான் இன்னொருவன். மறுவினடி, அங்கிருந்த ஆயிரம் ஜனங்களும் ஏக காலத்தில் தங்கள் குடிசைகளை நோக்கித் திடுதிடுவென்று ஓடினார்கள். இவர்கள் அங்கே போவதற்குள் பல குடிசைகள் நாசமாகிவிட்டன.

"யாரடா நெருப்பை வச்சுது?" என்றான் ஒருவன்.

"எல்லாம் கருங்காலிகள் வேலேயாகவிருக்கும்!" என்றான் இன்னொருவன்.




# அழியாதக் காதல்-2

‘சகுந்தலை’ என்பதைவிட அழகிய பெயரும் பாரத நாட்டில் இல்லை; அவளது காதலைக் காட்டிலும் பரிசுத்தமான காதலும் உலக சரித்திரத்தில் கிடையாது. சகுந்தலையின் காதலை அழிக்க கோபமும் சாபமும் சதியாலோசனை செய்தன. விதியும் வஞ்சனையும் போராடிவிட்டன. ஆனால் அதை எதுவும் அழிக்கமுடியவில்லை. வானமும் பூமியும் சாட்சியாக, கானகத்தில் சகுந்தலை துஷியந்தனைக் காதலித்து மணந்தாள். துஷ்யந்தன் நிராகரித்தும், சகுந்தலை போராடி தன் காதலை மன்னனும், நாடும் ஒப்புக்கொள்ளும்படி செய்தாள். முதல் சந்திப்பின்போது இரு காதலர்களுக்கும் அடைந்த ஆனந்த பரசவமும், உள்ளக் கிளர்ச்சியும் இப்படத்தில் சித்தரிக்கப்பட்டிருக்கிறது.

---

“அப்படியானால் சோமசுந்தரத்தைக் கவனிக்கவேண்டியது தான். அவன் வீட்டுக்குப் போவோம், வாருங்கள்” என்று சொன்னான் மூன்றாமவன்.

பிறகு எல்லோருமாக சோமசுந்தரத்தின் வீட்டை நோக்கி ஓட ஆரம்பித்தார்கள்.

திடீரென்று இரைச்சலும் சத்தமும் குடிசைப் பக்கத்திலிருந்து கிளம்புமுன் மனோரமா கூட்டத்திற்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தாள். அவன் கையில் ஒரு கவர் இருந்தது. அதைப் பிரித்து உள்ளேயிருந்த கடிதத்தைப் படித்தாள் :

அந்தக் கடிதத்தைப் பார்த்துவிட்டு மனோரமா புன்னகை பூத்தாள். ஷை கடிதம் அவள் கைக்கு வந்ததே மிக மர்மமான விஷயமாயிருந்தது. முதல் நாள் இரவு அவள் முத்துக்குமாருவின் வீட்டிலிருந்து திரும்பி வந்து படுத்துக் கொண்டதும், தனது அறையில் ஏதோ சத்தத்தைக்கேட்டு டார்ச் விளக்கை அடித்துப் பார்த்தாள். யாரோ ஒருவரது கால் மறைவது மட்டும் அவளுக்குத் தெரிந்தது. அது யார் என்பது மட்டும் அவளுக்குத் தெரியவில்லை. பயப் பிராந்தியுடன் அவள் விளக்கைப் போட்டுப் பார்த்ததும்தான் மேற் சொன்ன கடிதத்தை அந்த ஆசாமி உள்ளே போட்டுவிட்டுப் போயிருப்பது தெரிந்தது.

(தொடரும்)




இவர் யார், நமது **பண்டித ஜவாஹர்லால் நேருவா?** இது என்ன கோ
வேறு ஒன்றுமில்லை. ஆசிய மகாநாட்டுக்கு விஜயம் செய்த ருஷ்யப் பி
நிதிகள் அளித்த சட்டையைத்தான் அணிந்து கொண்டிருக்கிறார்!



ஓலோலமென்று கூவிய" காலத்தில் வயல்களில் பட்சிகளை அடித்து விரட்டு
வதற்காக மேற்கண்ட கவண்டிக் கல் உபயோகப்பட்டு வந்தது...



இப்பொழுதோ பையன் கையிலுள்ள 'காடபில்ட்' உதவியா
எந்தப் பட்சியை வேண்டுமென்றாலும் அடித்துத் துரத்தலாம்.

# கதம்பம்

.....'தேனீ'

### ★ நல்ல விருந்து

காங்கிரஸ் அக்கிராசனர் ஆசார்ய கிருபளானி சமீபத்தில் சென்னைக்கு வந்தபோது, பித்தாபுரம் யுவராஜா அவருக்கு ஒரு தேனீர் விருந்து அளிக்க நினைத்தார். இதற்குத் தலைவரின் அநுமதிபெறுவதற்காக யுவராஜா சென்றபோது, கிருபளானி "ஆமாம்; இந்த விருந்துக்கு எவ்வளவு செலவழிப்பதென்று திட்டம் போட்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார். "ஆயிரம் ரூபாய்!" என்று பதிலளித்தார் யுவராஜா. "விருந்து கிருந்து என்று எதற்காக வீண் செலவு செய்யவேண்டும்? அந்தப் பணத்தைக் காங்கிரஸ் நிதிக்கு நன்கொடை யளித்தால் எவ்வளவோ மேலான தல்லவா? தாங்கள் அப்படிக் கொடுக்கும் பட்சத்தில் நான் தங்களுக்கு ஒரு தேனீர் விருந்து அளிக்கிறேன்!" என்று கூறினார். யுவராஜாவும் இதற்கு ஒப்புக்கொண்டு 1000 ரூபாய் நன்கொடை யளித்தார். "இதோ என் விருந்து!" என்று கூறி கிருபளானி இரண்டு கப் காபி கொண்டுவரச்சொல்லி, இருவருமாகச் சாப்பிட்டனர்.

### ★ மாமனாரும் மாப்பிள்ளையும்

சர்ச்சிலின் மாப்பிள்ளை ஆலிவர் ஒரு நடிகன். அவன் சர்ச்சிலின் பெண்ணுடன் விவாக ரத்து செய்யுமுன் கடைசியாக டௌனிங் தெருவில் உள்ள தன் மாமனாரைப் பார்க்கச் சென்றான். சர்ச்சிலைப் பார்த்து "யுத்தத்திற்குப்பின் பெரிய தலைவராக யார் மதிக்கப்படுவார்?" என்று கேட்டான் ஆலிவர். சர்ச்சிலிடமிருந்து "முஸோலினி" என்று பதில் வந்தது. ஏன் என்று ஆலிவர் கேட்டதற்கு சர்ச்சில் "முஸோலினி ஒருவனுக்காவது தன் மாப்பிள்ளையைச் சுடத் தைரியம் இருந்ததே" என்று வியாக்யானம் செய்தார்.

### ★ உயர்ந்த உத்தியோகம்

சென்ற வருஷம் பொதுத் தேர்தல் நடப்பதற்கு முன்பாக, ஒரு நண்பர் ஸ்ரீ 'கல்கி'யை அணுகி, "தாங்கள் ஏன் ஒரு காங்கிரஸ் அபேட்சகராகத் தேர்தலுக்கு நிற்கக்கூடாது? பிரசார மந்திரி உத்தியோகத்திற்குத்தங்களைத் தவிர லாயக்கானவர் வேறு யாருமில்லை!" என்று கூறினார். அதற்குக் கல்கி "நான் பத்திரிகாசிரியர் வேலையைவிட்டு மந்திரி வேலைக்குப் போனால், பத்திரிகைத் தொழிலைவிட மந்திரி வேலை உயர்ந்தது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன் என்று ஆகிவிடும். அதை ஒருநாளும் நான் ஒப்புக்கொள்ள மாட்டேன்" என்றார்.

### ★ தந்திரம்

விக்டோரியா மகாராணியாருக்கும் பல பேரக் குழந்தைகள் உண்டு. ஒரு பேரனுக்குப் பிறந்த நாள் வந்தது. "எனக்கு ஏதாவது பரிசு அனுப்புங்கள். ஒரு பவுன் அனுப்பினால்கூடப் போதும்!" என்று மகாராணிக்கு எழுதினான்பேரன். அவனுக்கு அனுப்பினால் மற்ற எல்லாருக்கும் அனுப்பும்படி யாகுமென்றும், அது சாத்தியப்படாதென்றும் வருத்தம் தெரிவித்து மகாராணி தன் கையினாலேயே பதில் எழுதினாள். ஆனால் பையன் என்ன செய்தான் என்கிறீர்களோ! மகாராணியின் கையொப்பத்தை 5 பவுனுக்கு விற்றுவிட்டுப் பிறந்த நாளைக் குதூகலமாகக் கொண்டாடினான்!



# கனவு உலகம்

கே. எஸ். குமார்.

பல தேசங்களைச் சுற்றிப் பார்க்க வேண்டுமென்று நான் வெகு நாட்களாகக் கனவு கண்டு கொண்டிருந்தேன். என் கனவு ஒரு நாள் பலித்தது. நமது ராணுவ வீரர்கள் முன்னிலையில் நாடகங்கள் நடித்து அவர்களை உத்சாகப்படுத்துவதற்காக ஒரு கோஷ்டி அமைக்கிறார்கள் என்று கேள்விப்பட்டதும் நான் சந்தோஷத்துடன் அக் கோஷ்டியில் சேர்ந்தேன். மத்யதரைப் போர்முனையில் உள்ள பல ராணுவ ஸ்தலங்களுக்கு எங்கள் கோஷ்டி செல்வதற்கு ஏற்பாடாகி யிருந்தது. இந்த சந்தர்ப்பத்தை உபயோகித்துக்கொண்டு, எகிப்து, அரேபியா, ஸிரியா, லாபனென், முதலிய நாடுகளைப் பார்க்கலாம் என்று நினைத்ததுமே எனக்கு ஆனந்தம் உண்டாயிற்று.

ஒரு சுபயோக சுபதினத்தில்—நாங்கள் சுகமாகத் திரும்பி வந்ததிலிருந்து அது சுப வேளையாகத்தா னிருக்க வேண்டு மல்லவா? — நாங்கள் சென்னையிலிருந்து புறப்பட்டு பம்பாய் சென்றோம். அங்கிருந்து அராபிக்கடல் வழியாக "ஏடன்" எனும் நகர் சென்றோம். அங்கிருந்து செங்கடல் வழியாச் எகிப்து தேசத்தின் தலை நகரமாகிய "கெய்ரோ" வை அடைந்தோம் கெய்ரோவை அடையும்வரை, சமுத்திர யாத்திரை, பல நாட்கள் கண்ணுக் கெட்டிய தூரம் சமுத்திரத்தைப் பார்த்துப் பார்த்து அதிசயித்தேன்; அலுப்புற்றேன்.

கெய்ரோவின் மாபெரும் ஜன சமுத்திரத்தைப் பார்த்ததும் நிம்மதி உண்டாயிற்று. ஒரு கோடியே மூன்று லக்ஷத்து ஐம்பதினுயிரம் ஜனங்கள் கொண்ட ஒரு முக்கிய மான பட்டிணம். நாங்கள் சென்றிருந்த சமயம் அங்கு பகல் 11 மணிக்கு மேல்தான் சூரிய பகவானைக் காண முடிந்தது. இத்தேச மக்களான, எகிப்து ஜாதியினரும் அராபியரும் மகம்மதிய குலத்தைச் சார்ந்தவர்கள். ஆரோக்கியமான தேகம். ஐரோப்பியர்களைப் போலவே சிவந்த மேனி. தோற்றத்துக்கு அடுத்தபடியாக முக்கியமானது பேச்சுத்தான் அல்லவா? எங்கு பார்த்தாலும் அராபி பாஷையின் விநோதமான சப்தந்தான் காதில் விழுந்தது. எல்லோரும் அராபி பாஷையே பேசுகிறார்கள். எல்லா விதமான சட்ட திட்டங்களையும் அராபி பாஷையிலேயே அமைத்திருக்கிறார்கள் என்று அறிந்தேன். ஆங்கில பாஷை ஆதரிப்பாரின்றி இரண்டாவதாகவே கருதப்பட்டு வருகிறது. இதை நினைக்கும்போது, நம் நாட்டில் ஆங்கிலேயர்கள் வெளியேறப்போகும் இந்தத் தருவாயில் கூட ஆங்கிலத்தைக் கட்டிகொண்டு அழுவதை எண்ணி நான் அழாமலிருக்க முடியவில்லை. அராபியர்கள் கொஞ்சம் முரடர்களாகக் காணப்படுகிறார்கள். அடிக்கடி அவர்கள் சம்பாஷிக்கும்போது முன் கோபமாகப் பேசுவதையும் கவனித்தேன். ஆனாலும் சிநேகிதர்களுக்கு உயிர் கொடுக்கும் மனப்பான்மை அவர்களுக்கு உண்டு என்று நான் கேள்விப்பட்டேன்.

முதன் முதலாக, எகிப்தில் நான் ஏதோ சாமான் வாங்கிய போது, சில அலுமினியன் காசுகளை கடைக்காரன் என்னிடம் கொடுத்தான். பித்தளை, நிக்கல், வெள்ளி நாணயங்கள் உண்டு; ஆனால் அலுமினியத்தில் கூட நாணயமா? எனக்கு ஆச்சரியமாயிருந்தது. எகிப்தில் ஏராளமான திராபையான அலுமினியம் நாணயங்கள் வழங்கி வருகின்றன. நமது காலணாவைப்போல் எகிப்தில் பயாஸ்டர் என்று நாணயங்கள் இருக்கின்றன. ஒரு ப்யாஸ்டர் என்பது சற்றேறக்குறைய நம் நாட்டு நாணயத்திற்கு 2 அணு 2 தம்பிடி யாகிறது. நம் நாட்டு ஒரு ரூபாய்க்குச் சமமாக பௌண்ட் கருதப்படுகிறது. ஆனால் கணக்கெடுத்துப் பார்க்கும்போது ஒரு பௌண்ட் என்று சொல்லப்படும் நோட்டு நம் நாட்டு ரூபாய்க்கு 13—10—0 ஆகிறது. இதில் வித்தியாசம் என்னவென்றால் நாம் ஒரு ரூபாயை எவ்வளவு தாராளமாக நினைத்துச் செலவு செய்கிறோமோ அவ்விதமே இங்கே பௌண்ட் செலவழிக்கப்படுகிறது. ஆனால், இங்குள்ள எந்த மனுஷனுக்கும் ஏழு பௌண்டிற்குக் குறைந்த சம்பளமே யில்லை

இங்குள்ள எகிப்தியர்கள் மிகவும் நாகரிக முன்னவர்கள். அரேபியர்கள் அவர்களைவிடக் குறைந்த நாகரிக முன்னவர்களாகக் காணப்படுகிறார்கள். எகிப்திய ஆண்கள் ஸூட், கோட், பூட், டை, ஸ்வெட்டர் முதலியவைகளை அணியாமல் வெளியே வரமாட்டார்கள். பெண்களோ கவுன்,



அராபியப் பெண்

பூட், முதலியவைகளை ஆங்கிலேயர் போலவே அணிகிருர்கள். அராபிய ஆண்கள் கழுத்திலிருந்து கால்வரை ஒரு பயங்கர அங்கியை அணிந்து கொள்கிருர்கள். பெண்கள் கருப்புநிற அங்கியை அணிந்து முக மூடியுடன் வெளியே வருகிருர்கள். கேழ்வரகு, சோளம், முதலிய மாவுகளால் செய்யப்பட்ட ரொட்டிகளையும், அரைப்பக்குவமாக வேக வைத்த காய் கறிகளையும், இவர்கள் ஆகாரமாகக் கொள்ளுகிருர்கள். இவர்களில் நூற்றுக்கு எழுபத்தைந்துபேர்



மகமதாலி மசூதி.

"கபே" களிலும், "பார்" களிலும் தான் போய்ச் சாப்பிடுகிருர்கள். சமையல் செய்து வீட்டில் சாப்பிடுபவர்கள் மிகச்சிலரே. ஹோட்டல்களில் சாப்பிட்டானதும், அங்கேயே "உக்கா" பிடிப்பது வழக்கமாக இருக்கிறது. "சிகரெட்" பிடிப்பதும் உண்டு. ஆண் பெண் முதலிய இரு வகுப்பினரில் குழந்தை முதல் பெரியோர் வரை சகலரும் மதுபானங்களைச் சர்வசாதாரணமாக அருந்துவதைப் பார்த்தேன். ஆனல் இதன் விளைவாக, அமிதமான சண்டை சச்சரவுகள் ஏற்படுகிறதில்லை. நம் பாரதியார் கூறியபடி, உத்தியோகஸ்தன் பணக்காரன், ஏழை தோட்டி, என்ற வேறுபாடின்றி "எல்லோரும் ஓர் குலம்" என்று ஒருவருக்கொருவர் பழகுவதைக் கவனித்தேன். இன்னூர்தான் இன்ன தொழில் செய்ய வேண்டும், வேறுயாரும் அத்தொழிலைச் செய்யக்கூடாதென்ற கட்டுப்பாடு இல்லை என்று தெரிந்தது.

கெய்ரோ நகரைச் சுற்றிப் பார்த்து விட்டு வருவதற்காகக் கிளம்பினேம். பழைய டில்லி, புது டில்லி மாதிரி கெய்ரோவில் இரண்டுள்ளன. இவற்றைப் பழைய கெய்ரோ, புதிய கெய்ரோ என்று குறிப்பிடுகிருர்கள். பழைய கெய்ரோ புராதனமாகவும், சிறிய குடியிருப்புக்கு வசதியுள்ளதாயும் உள்ளது. ருமானியர்கள் குடியேறிய பிறகுதான் அந்த நகரம் வலுப்பட்டதாகச் சொல்லப்படுகிறது, பழைய கெய்ரோவுக்கு, முன்பு பேபிலான் என்ற பெயர் இருந்தது.

கெய்ரோவிலுள்ள பாழடைந்த வீடுகளிலும், சுவர்களிலும், செதுக்கப்பட்டுள்ள பொம்மைகள் மூலமாகவும் பண்டையகால எழுத்துக்கள் மூலமாகவும், அங்கு 1879-வருஷத்தில் நெபோலிய உத்தியோகஸ்தர்கள் வசித்து வந்ததாகத் தெரிகிறது.

கெய்ரோவை ஒட்டிய வண்ணம் மக்வாட்டம் என்ற மலை ஒன்றிருக்கிறது. "ஸுல்தான் ஸலாதீன்" என்பவரால் ஸிடாடல் என்ற பெரிய கோட்டை இங்கு கட்டப்பட்டிருக்கிறது. இதை மிகவும் முக்கியமான இடமாக அந்நாட்டினர் கருதுகின்றனர்.

மக்வாட்டம் மலையிலேயே கோட்டைக்குச் சமீபத்தில் எல்லாவற்றையும் விட உயர்ந்ததொரு கட்டிடம் இருக்கிறது. அதுதான் 1867-ம வருஷத்தில், "மகமதாலி" என்பவரால் அலபாஸ்டர் என்று சொல்லப்படும் வெண்மை நிறக் கல்லினல் மிக நேர்த்தியாகக் கட்டப்பட்ட ஒரு

மசூதி! இது சமீபத்தில்தான் புதுப்பிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

இதனுள் சென்று பார்த்தபோது எப்பக்கம் திரும்பினாலும் வெண்மை நிறம். ஒவ்வொரு தூண்களும் ஒரே கல்லினால் பின்னமின்றி வெகு அழகாகச் செதுக்கப்பட்டிருக்கிறது. உட்புறத்தின் உயரம் ஏறக்குறைய 60 அடி உயரமிருக்கும். பசுமை நிறமுள்ள தங்கத் தகடுகளைச் சிற்சில இடங்களில் பதித்திருப்பது, பார்ப்பவர்களைப் பிரமிக்கச் செய்வதோடு நம்மையு மறியாமல் ஒரு நல்லுணர்ச்சியும், பரவசமும் ஏற்படுகிறது. "உலகில் தெய்வீக சக்தியால் எதுவும் நடக்கவில்லை. எல்லாம் என்னாலேயே நடக்கிறது" என்று சொல்லும் நாஸ்திகனுக்குக் கூட பக்தியை உண்டாக்கும் சக்தி இம் மசூதியிலிருக்கிறது.

மசூதியின் கோடியில் சுரங்கவழி ஒன்றிருக்கிறது. அவ்வூர் அரசரின் மனைவி அந்தப்புரத்திலிருந்தபடியே சுரங்கம் வழியாக வந்து நமாஸ் செய்வதற்காக இச்சுரங்க வழி ஏற்படுத்தப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இதில் இன்னொரு விசேஷத்தையும் கண்டோம். மசூதியின் மேற்குச் சுவரில் இரண்டு விசித்திரத் தூண்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அதில் ஒரு தூணை நாம் கையால் சுற்றினால் சுற்றுகிறது. மற்றொன்று சாதாரணமாக இருக்கிறது. அரச குடும்பத்தினரில் ஒருவர் குருடராயிருந்ததாயும் அவர் நமாஸ் செய்யு மிடத்தை அவரே தம் கையினால் தடவிப் பார்த்து எந்தத் தூண் சுற்றுகிறதோ அதுதான் நமாஸ் செய்யுமிடம் என்று தெரிந்து கொண்டதாயும் சொல்லுகிறார்கள்.

உங்களில் யாருக்காவது வைத்தியராக வேண்டும் என்ற ஆசையிருக்கிறதா? பெரிய பட்டமோ, படிப்போ அவசியமில்லை. பளிச்சென்று



கெய்ரோவில் ஒரு பழக்கடை.

எகிப்துக்கு ஒரு டிக்கட் வாங்கிக் கொண்டு கிங்கேவோடு என்ற இடத்திற்குப் போங்கள். அங்கே சில மாதங்கள் இருந்தால் நிச்சயம் யாரும் வைத்தியராகி விடலாம்.

மேற்படி இடத்தில் ஆரோக்கிய தத்துவக் கண்காட்சிசாலை ஒன்று இருக்கிறது. இதனுள் உலகிலுள்ள சகல ஜீவன்களின் நோய்களையும், ஆண், பெண் முதலியவர்களின் நோய்களையும், கல்வி வாசனை இல்லாதவர்கள் கூட எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம், களி மண்ணால்



இதுதான் 'ஸ்பிங்ஸ்'!

பொம்மைகளாகத் தயாரித்துக் காட்டு கிறார்கள். ஒவ்வொரு வியாதியின் நிவாரணமும் களி மண் பொம்மை கள் மூலமே விளக்கப்படுகிறது. இக் காட்சியை நாம் தினந்தோறும் சென்று பார்ப்போமேயானால் இன்ன வியாதியின் போக்கு இப்படி இருக்கும், இதற்கு இன்ன மருந்து தான் பரிகாரம் என்பதைத் தெரிந்து கொள்வதோடு, காலக்கிரமத்தில் வைத்திய நிபுணராகவும் ஆகிவிட லாம். சேர்ந்தாற் போல் நாலு நாட்கள் சென்றிருந்த எங்களுக்கே சில ஆராய்ச்சிகள் பிடிபட்ட தென் ருல், இன்னும் நிபுணத்வம் வாய்ந்த வர்கள் ஒரு மாத காலம் தொடர்ச்சி



கட்டுரை ஆசிரியர்.

யாகச் சென்று பார்வை யிட்டால் அதனுல் ஏற்படக்கூடிய பலனைப் பற்றிக் கேட்பானேன்?

உலக அதிசயங்களில் சிறந்தவற் றுள் ஒன்றுன கிஸ்லா கோபுரத்தை (Pyramids)க் காணச் சென்றிருந் தோம். இக்கோபுரம் சுமார் கி. மு. 3000 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப் பட்டதாகச் சொல்லுகிருர்கள். இது 13 ஏகரா சதுர அளவில் 500 அடி உயரம் இருக்கிறது. இதன் எடை 200 கோடி டன்கள் என்று சொல் லப்படுகிறது.

மேற்சொன்ன இந்த பெரிய கோபுரத்திற்குச் சமீபத்தில் பலசிறிய கோபுரங்களிருக்கின்றன. இந்தக் கோபுரங்கள் கட்டியதின் காரணம் யாதெனில், அரச குடும்பத்தினர் இறந்தபின் அவர்களுக்குரிய ஆடை ஆபரணங்களை எல்லாம் சவத்தின் மேலிட்டுப் பாலைவனத்தில் சமாதி கட்டி வந்தனராம். அடிக்கடி ஏற்படும் பயல் காற்று விபத்தினுல் மணல் சமாதிகளை இருந்த இடம் தெரியா மல் மூடிகொள்வதைத் தடுக்க இந்தக் கோபுரங்களைச் சரிவாகவும் செங்குத் தாகவும் அமைத்தார்களாம், இக் கோபுரங்களைக் காணச் செல்ல வேண்டுமானுல், பாலைவனக் சப்ப லாகிய ஒட்டகங்களின் மீதோ அல் லது அராபிக் கழுதைகள் மீதோ தான் சவாரி செய்யவேண்டும். இதற்குக் குறிப்பிட்ட கட்டணங் களுண்டு.

அராபிக் கழுதைகளை முதன் முத லாகக் கண்ட நாங்கள் "குதிரையின் மேல் சவாரிசெய்ய வேண்டுமா?" என்று கேட்டோம். அதற்கு விவரம் தெரிந்த நண்பர் "குதிரை மீதல்ல. கழுதை மீது" என்றூர். நீண்டநேரம் விவாதித்தபின் கழுதை என்ற தீர் மானத்திற்கு வந்தோம். இக் கழுதை கள் நம் தேசத்திலுள்ள குதிரைகளை விட வெகு அழகாக உள்ளன என் பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.

இந்த கிஸ்லா கோபுரங்களுள் இரண்டாவது கோபுரம் கட்டும் போதுதான் ஸ்பிங்ஸ் (Sphinx) என்ற சிலையைச்செதுக்கினுர்களாம். இச் சிலை சுண்ணும்புக் கல்லினுல் செதுக்கப்பட்டிருக்கிறது. இதன் முகம் மனித முகம் போலவும், உடம்பு சிங்கம் போலவு மிருக்கிறது. இப்படி இருப்பதின் அர்த்தம் என்ன வென்று விசாரித்ததில், முன் காலத் தில் அங்கு வசித்தவர்கள் உருவள வில் மனிதர்களாயினும் வலிமையில் சிங்கத்தைப் போன்றவர்களா யிருந் தார்கள் என்பதை நிரூபித்துக் காட் டவே இவ்வாறு அமைக்கப்பட்ட தாகச் சொல்லுகிருர்கள். மேற் சொன்ன அதிசயங்களை யெல்லாம் பார்த்துவிட்டு புதிய கெய்ரோவுக்கு வந்து சேர்ந்தோம்.

(தொடரும்)

# கைத்தொழில் ரகசியம்

... தாஸன்

## 1. மெழுகுவர்த்தி செய்யும் முறை.

மெழுகு வர்த்தி தொழில் ஆரம்பிப்பதற்கு முதன் முதலில் அறிந்து கொள்ளவேண்டிய சில முக்கிய விஷயங்கள் இருக்கின்றன. இத் தொழிலானது எல்லோராலும் விரும்பப்படுகிற தொழில்களில் ஒன்று. இத் தொழிலை சொந்த மூலதனத்தைக் கொண்டு ஆரம்பிக்கலாம். தொடக்கத்தில் அனுபவத்தின் நிமித்தம் சில பொருள்கள் சேதமாகும். ஆகையால் உடனேயே லாபத்தை எதிர்பார்ப்பது கடினம். ஆனால் அனுபவம் ஆக ஆக இத்துறையில் நல்ல லாபம் கிடைக்குமென் பதில் ஐயமில்லை.

மெழுகுவர்ததியானது உஷ்ணம் பட்ட உடனே அல்லது குறைந்த உஷ் ணத்திலேயே உருகிவிடாமல் உருகிய நிலையிலேயே நின்று எரிதல் வேண்டும். இவ்வாறு இருக்க வேண்டுமானால் மெழுகுவர்த்தி தயாரிப்பில் பரிசுத்தமும் உயர்ந்ததுமான டாலோ, கொழுப்பு, மெழுகு, பாரபின் போன்ற கொழுத்த ஆசிட்டுகளை உபயோகித்தல் வேண்டும். ஸ்டியரிக் ஆசிட் கலப்பில் சேர்ப்பதால், அது மெழுகுவர்த்தியைச் சிறு உஷ்ணத்தில் உருகச் செய்யாமல் காப்பாற்றி, நீடிதது நின்று எரியச் செய்கிறது,

### சேர்க்கை

| | |
|---|---|
| தண்ணீர் | 5 பவுண்டு |
| (சுத்தம் செய்த கொழுப்பு) | 25 ,, |
| மெழுகு | 1 ,, |
| சீனாகாரம் | ½ ,, |
| ஸ்டீரிக் ஆசிட் | ¼ ,, |

மேற்கண்ட எல்லாவற்றையும் ஒரு வாயகண்ட பாத்திரத்தில் ஒன்று படக்கலந்து அடுப்பில் வைத்து நன்றாய்க் காய்ச்சி, யாவும் உருகிக் கொதிப்புக் கண்டவுடன் அழுக்கெடுத்து நமக்கு வேண்டிய அளவில் திரியுடன் அச்சுகளி லிருந்து எடுத்து கனத்த கடுதாசிகளில் பாக்செய்து, லேபில் ஒட்டி, தக்க விளம்பரங்களுடன் விற்பனைக்கு அனுப்பலாம்.

சலவை செய்த 20ம் நெ, நூலில் 10 இழை யெடுத்து மூன்று தொகுதி யாகக் கொண்டு ஜடை பின்னுவதுபோல் பின்னி போரிக் பவுடர் சொலுஷனில் நனைத்து காய்ந்தபின் உபயோகிக்க வேண்டும். திரியானது துவண்டு விழாமல் எப்பொழுதும் முறுக்காக இருக்கும்படியாகப் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

குறிப்பு :—“ 12 காண்டில் மோல்ட் ” என்ற கை மிஷின் கீழ்கண்ட விலாசத்துக்கு எழுதித் தருவித்துக் கொண்டால் ஒரு நாளைக்கு 2000 முதல் 3000 வரை மெழுகுவர்த்தி யாரும் செய்யலாம். விலை ரூ. 40.

Commercial Syndicate, E-4. Choukmati, Lahore.

(அடுத்த இதழில் சோப்பு செய்யும் முறை வெளியாகும்)

## பால நட்சத்திரம் 4.

# ★ நிர்மலா ★



போன மாதம் 24ந்தேதி திங்கட்கிழமை இரவு அநேகர்—டாக்டர் அளகப்பச் செட்'...ார் உட்பட—மியூசியம் தியேட்டரில் எழும்பூர் இந்திய நுண் கலைக் கழகத்தாரின் ஆருவது மாணவியான நிர்மலாவின் நடனத்தைப் பார்த்த பிறகு, அவள் நாட்டியம் ஆடுவதுபோல் இன்பக்கனவு கண்டு கொண்டிருப்பார்கள் என்று சொன்னால் மிகையாகாது. அன்று நிர்மலா, ஓர் சிறு பெண் மான்குட்டிபோல் துள்ளித் துள்ளி மேடையில் அந்த பந்தநல்லூர் பரத நாட்டியம் ஆடியதைப் பார்த்து பிரமிக்காதவர்கள் இல்லை என்று சொல்லலாம்.

பதங்களை வழக்கம்போல் கலியாணசுந்தரவல்லி வெகு அழகாகப் பாட, நிர்மலா அவைகளை ரஸித்து பாவத்துடன் அபிநயம் பிடித்தது, தேவலோகத்திலிருந்து ஒரு கந்தர்வக் குழந்தை வந்து ஆடியதுபோல் இருந்தது என்று கூசாமல் சொல்லலாம். "பதறி வருகுது" என்னும் இடத்தில் மாயப்பொடி போட்டுத்தான் சபையோரை மயக்கினுள் நிர்மலா! "எத்தனை சொன்னாலும்" என்னும் பதத்தில் "ஆத்திரப்படுகிருய்" "நயத்திலும் பயத்திலும்" என்னும் இடங்களில் அவள் பிடித்த அபிநயத்தைப்பற்றி எத்தனை வேண்டுமானாலும் சொல்லலாம். பாரதியாரின் "ஆசைமுகம்" என்னும் பதத்தைப் பொருத்தவரையில் நிர்மலா அபிநயம் பிடித்ததை மறந்து போகவே முடியாது.

நிர்மலா ஒரு நிஜ நட்சத்திரம்தான்! அதுவும் அழகாகப் பிரகாசிக்கும் நட்சித்திரம்! இவள் நடனத்தைப் பார்த்த பிறகு "சொக்கலிங்கம் சிட்சை சோடை என்பதில்லை" என்பது ஊர்ஜிதமாகிறது, மேற்படி கழகத்தின் காரியதரிசி அட்வகேட் ஸ்ரீமான் பி. எஸ். சாரங்கபாணி ஐயங்காருக்கு ஒரு ஷொட்டு அல்ல! ஆறு ஷொட்டுக் கொடுக்கலாம்! பலே காரியதரிசி!

# கள்ளனின் உள்ளம்




என். நாராயணன்.

சூரியன் அஸ்தமித்து இரண்டு நாழிகை இருக்கும்.

தன் குடிசையின் வாசலில் உட்கார்ந்து கொண்டு ஆழ்ந்த யோசனையில் ஈடுபட்டிருந்தான் முருகப்பன். அவன் முகத்தில் கவலை தேங்கியிருந்தது. அவன் மனத்தைக் கலக்கிக் கொண்டிருந்த கவலைக்குக் காரணம் அவனுடைய பொருளாதார நிலைமைதான்! ஆம்; அவனிடத்தில் அப்பொழுது இருந்த ஆஸ்தி எல்லாம் மூன்றணுக்களும் இரண்டு பீடிகளுந்தான்!

முருகப்பன் 'முதல் இல்லாத தொழிலை'த்தான் நடத்தி வந்தான். கடந்த நான்கு வருஷங்களாக அவன் நூற்றுக் கணக்கானவர்களின் சட்டைப் பையிலிருந்து வெகு லாகவமாக 'மணிபர்ஸ்'களையும், கடிகாரங்களையும், பௌண்டன் பேனுக்களையும் எடுத்திருந்தும், ஒரு தடவை கூட அகப்பட்டுக் கொண்டதில்லை. எவ்வளவோ தடவைகளில் அவன் வீடுகளுக்குள்ளே நுழைந்து கொள்ளையடித்ததும் உண்டு.

முருகப்பனின் திருட்டுத் தொழிலைப்பற்றி அவனுடைய தாயாருக்கே தெரியாது என்றால், அவன் தன் காரியங்களை எவ்வளவு ரகசியமாகச் செய்து வந்தான என்பதைப்பற்றிக் கூற வேண்டுமா?

அன்றிரவு யார் வீட்டில் புகுந்து கொள்ளையடிக்கலாம்? என்று அவன் யோசித்துக் கொண்டிருந்தபோது திடீரென்று, “என்ன அண்ணே!... பலத்த யோசனை செய்கிறாப்போல் இருக்கே! ..” என்று யாரோ கேட்பது போல் தோன்றவே, நிமிர்ந்து பார்த்தான்.

புன்னகை பூத்த முகத்துடன் அடுத்த வீட்டு அஞ்சலை நின்று கொண்டிருந்ததைக் கண்டான்.

## 2

அஞ்சலைக்குச் சுமார் இருபது வயதிருக்கும். பார்ப்பதற்கு லட்சணமாயிருப்பாள். முருகப்பனின் குடிசைக்கு அடுத்த குடிசையில் அஞ்சலையும் அவளுடைய பாட்டியும் வசித்து வந்தனர். அஞ்சலையின் தாய் தந்தையா அவள் குழந்தையாயிருந்தபொழுதே காலமாகி விட்டதால், அவளுடைய தாயைப் பெற்ற பாட்டியே வளர்த்து வந்தாள். பாட்டிக்கு வேறு கதியே கிடையாததால, அவளுக்கு வேண்டிய சிசுருஷைகள் யாவற்றையும் அஞ்சலையே செய்து வந்தாள். இரண்டு ஜீவன்களும் வயிறு வளர்த்தாக வேண்டும் அலலவா? அதற்காகத்தான் அஞ்சலை பக்கத்திலிருந்த மிஸ் ரோகிணியின் பங்களாவில் வேலை பார்த்து வந்தாள்.



மிஸ், ரோகிணியை அறியாதவர் கூட இருக்க முடியுமா, என்ன? சினிமா உலகத்தின் ஜோதியாக விளங்கினான் மிஸ். ரோகிணி. ஒரு படத்தில் நடிப்பதற்கு அவள் லட்ச ரூபாய் பெற்று வந்தது யாவரும் அறிந்த ரகசியம்.

அஞ்சலையின் பாட்டியும் முருகப்பனின் தாயாரும் நெருங்கிப் பழகியதால், முருகப்பனும் தைரியமாக அஞ்சலையுடன் பேசத் தொடங்கினான். நாளடைவில் அவனுடைய சாதுரியப் பேச்சு அஞ்சலையின் மனதைக் கவர்ந்து விட்டது. சமயம் நேர்ந்த பொழுது, அவனும் அவளும் அளவளாவத் தவறுவதில்லை. தனக்கு ஒரு ஜவுளிக் கடையில் வேலை என்று அஞ்சலையிடம் தெரிவித்திருந்தான் முருகப்பன்!

அஞ்சலையைக் கண்ட முருகப்பன் அசட்டு சிரிப்புச் சிரித்த வண்ணம், “ஒன்றுமில்லை, அஞ்சலை!... என் சிநேகிதன் ஒருவனுக்கு வருகிற வெள்ளிக்கிழமையன்று கலியாணம். அவனுக்கு என்ன பரிசு அளிக்கலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தேன்!......” என்று புளுகினான்.

“ஏன் ஒரு ‘நெக்லேஸ்’ வாங்கிக் கொடுப்பதுதானே?...... வெகு அழகாயிருக்குமே!” என்று ஏளனச் சிரிப்புடன் கூறினாள் அஞ்சலை.

“நெக்லேஸுக்கும் அட்டிகைக்கும் நான் எங்கே போவேன்?...முதலில், ‘நெக்லேஸ்’ என்றால் எப்படி இருக்கும் என்றுகூட எனக்குத் தெரியாதே!...ஹூம்...உனக்காவது தெரிந்திருக்கும்... உன் எஜமானியம்மாள் நெக்லேஸ் போட்டுக்கொண்டிருப்பாள்!...” என்றான் முருகப்பன்.

“சந்தேகமென்ன?...ரோகிணியிடம் இரண்டு நெக்லேஸ்கள் இருக்

கின்றன...போன வாரம் ஒரு வைர அட்டிகை வேறுவாங்கி யிருக்கிறாள். பார்த்தால் கண் கூசும்! அவ்வளவு பிரகாசம்!... முப்பதினாயிரம் ரூபா யல்லவா கொடுத்திருக்கிறாள்?''

முருகப்பனின் மனம் தீவிரமாக வேலை செய்தது. "ஆமாம்! உன் எஜமானி இவ்வளவு நகைகளைப் போட்டுக் கொண்டிருக்கிறாளே!... இரவில் பயமாயில்லையா? ... பங்களாவில் அவளுக்குத் துணையிருக்கிறதா?'' என்று கேட்டான்.

"பங்களாவில் ஒரு சமையற்காரனும் தோட்டக்காரனும் இருக்கின்றனர்...இருவரும் பங்களாவில்தான் படுத்துக் சொள்வார்கள்...மேலும் 'டெலிபோன்'வேறு இருக்கிறது... ரோகிணி இரவில் நகைகளைக் கழற்றி ஒரு ரகசியமான இடத்தில் வைத்து விடுவாள். அந்த இடம் எனக்கு மாத்திரந்தான் தெரியும்!... என்னிடத்தில் ரோகிணிக்கு அவ்வளவு விசுவாசம்!...அவள் எங்கே ஒளித்து வைக்கிறாள், தெரியுமா? ... உன்னிடத்தில் சொல்வதில் என்ன வந்துவிடப் போகிறது?...... அவள் மாடியில் படுத்துக் கொள்ளும் அறைக்கு அடுத்த அறையில் ஒரு ரேடியோப் பெட்டி இருக்கிறது. அது பார்ப்பதற்கு ரேடியோவே தவிர, உண்மையில் வெறும் சாதாரணப் பெட்டிதான்! அதன் சாவி எது தெரியுமா? அதற்கு எதிரே சுவரில் ஒரு கடிகாரம் இருக்கிறது. அந்தக் கடிகாரத்தின் சாவிதான் ரேடியோ பெட்டியின் சாவி!...ரேடியோபெட்டிக்குள் தான் ரோகிணியின் விலையுயர்ந்த நகைகள் எல்லாம் இருக்கின்றன ... ஹூம் ... இன்றிரவு ரோகிணி பங்களாவில் தனியாகத் தான் இருப்பாள்....சமையற்காரன் யாருக்கோ கலியாணம் என்று சொல்லிவிட்டுப் பக்கத்திலுள்ள கிராமத்திற்குப் போய்விட்டான். நாளைக் காலையில்தான் வருவான் ... தோட்டக்காரனுக்குக் காலையிலிருந்து காய்ச்சலும் தலைவலியும் பொறுக்க முடியவில்லை யென்று அருகிலுள்ள தன் வீட்டிற்குப் போயிருக்கிறான். என்னால் பாட்டியைத் தனியாக விட்டுவிட்டு வரமுடியாது' என்று சொல்லி விட்டு வந்து விட்டேன்!...ஹூம் சரி நேரமாகி விட்டது...பாட்டிக்கு ரசம் வைக்க வேண்டும்''... என்று சொல்லிக் கொண்டே நகர்ந்தாள் அஞ்சலை.

அவள் சென்ற பின். வெகுநேரம் சிந்தனை செய்த வண்ணம் உட்கார்ந்திருந்தான் முருகப்பன்.



அவன் முகம் மலர்ந்தது. ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன் போல் எழுந்திருந்தான். தன்னுடைய 'டார்ச்சு' விளக்கை எடுத்து, அது சரியாக எரிகிறதா வென்று சோதித்துப் பார்த்துக்கொண்டான்.

## 3

அன்றிரவு மணி பதினொன்று ஆகிச் சில நிமிஷங்கள் சென்றிருக்கும். எங்கும் பயங்கர நிசப்தம் குடி கொண்டிருந்தது.

மிஸ். ரோகிணியின் பங்களாதெருவின் கடைசியில் தனியாக நின்றது. அதைச் சுற்றி உயரமான காம்பவுண்ட் சுவர் சென்றது. பங்களாவைச் சுற்றி வளர்ந்திருந்த மரங்கள் அதை மூடிக் கொண்டிருந்தன.

ரோகிணியின் பங்களாவின் வாயிலில் வந்து நின்று சுற்று முற்றும் கவனித்துப் பார்த்தான் முருகப்பன். தெருவின்மற்றொரு முனையின்ருகே, முனிசிபல் விளக்கினடியில், ஒரு ஆசாமி நின்று கொண்டு, பீடி

யையோ சிகரெட்டையோ பற்ற வைத்துக் கொண்டிருந்ததைக் கண்டான். அவன் பார்வையில் படாமல் உள்ளே நுழைந்து விட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான். மறு விநாடி, மின்னலைப்போல் தாவி வாசற் புறத்திலிருந்த, இரும்புக் கம்பிகளாலான கேட்டைத்தாண்டிக் குதித்தான்.

அதிர்ஷ்டம் அவன் பக்கம் இருந்தது. பங்களாவின் பின்புறக் கதவுகளில் ஒன்று உள்பக்கம் தாளிடப் படாமல் வெறுமனே சாத்தப்பட்டிருப்பதை உணர்ந்தவுடன் அவனுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை அதைத் திறந்து கொண்டு, சந்தடியின்றி மேலே சென்றான்.

அஞ்சலை கூறியது போல் ஒரு ரேடியோ வைக்கப் பட்டிருந்தது. அதற்கு எதிராக ஒரு கடிகாரம் சுவரில் மாட்டப் பட்டிருந்தது. கடிகாரத்திலிருந்த சாவியை எடுத்து ரேடியோவின் மேல் மூடியைத்திறந்தான் முருகப்பன். 'டார்ச்சு' விளக்கின் வெளிச்சத்தைப் பெட்டிக்குள்ளே செலுத்தினான். மறுவிநாடி அவன் கண்களே குருடாகி விட்டனவோ என்று தோன்றியது! உள்ளே வைக்கப்பட்டிருந்த வைர வளையல்களும், மோதிரங்களும், அட்டிகை நெக்லேஸ் முதலிய ஆபரணங்களும் அவன் கண்களைப் பறித்தன. எல்லாவற்றையும் சேர்த்தால் குறைந்தது ஒரு லட்சம் ரூபாய் பெறும் என்பதில் சந்தேகமில்லை என்று அவன் மனம் கணக்கிட்டது!

பக்கத்திலிருந்த அறையிலிருந்து ஏதோ சப்தம் வந்தது போல்தோன்றியது. 'ரோகிணி விழித்துக் கொண்டு விட்டாளோ?' என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டான் முருகப்பன். பிறகு 'எல்லாம் பிரமைதான்', என்று தானே சமாதானம் கூறிக் கொண்டு, பெட்டிக்குள்ளிருந்த அட்டிகையின் மீது கையை வைத்தான்.

வைத்தவன் கையை எடுக்கவில்லை! அவனை அவ்வாறு செயலற்றவனாய்ச் செய்தது பக்கத்து அறையிலிருந்து கிளம்பிய ஒரு கூச்சலே.

"திருடன்!" என்றரோகிணியின் கூச்சலைக் கேட்டு ஸ்தம்பித்து விட்டான் முருகப்பன். தான் வந்திருப்பதை அவள் எப்படித் தெரிந்து கொண்டாள் என்று அவனுக்கு விளங்க வில்லை.

மறு நிமிஷமே அவன் சந்தேகம் நிவர்த்தியாகி விட்டது. "ரோகிணி! கத்தாதே!...நான்தான்!"என்றகுரல் கேட்டது. வேறு ஒரு ஆசாமி வந்திருக்கிறான் என்பதை முருகப்பன் உணர்ந்து கொண்டான். தான் வந்த காரியத்தை மறந்து, அடுத்த அறையில் என்ன நடக்கிறதென்பதை அறியும் பொருட்டு மெதுவாகச் சந்தடியின்றி வெளியே வந்தான்.

ரோகிணியின் அறையில் எலெக்ட்ரிக்' விளக்குகளின் வெளிச்சம் தோன்றியது. வாசற்படியருகில் மறைவாக நின்று கொண்டு உள்ளே எட்டிப் பார்த்தான்.

சுமார் முப்பத்தைந்து வயதுள்ள ஒரு ஆசாமி ரோகிணியின் படுக்கையினருகில் உள்ள ஒரு சோபாவின் மீது உட்கார்ந்திருந்ததையும் அவனை எரித்து விடுபவள் போல் பார்த்த வண்ணம் ரோகிணி நின்று கொண்டிருந்ததையும் கண்டான்.

"திருட்டுப் பயலுக்கு எவ்வளவு திமிர்! சோபாவில் சாய்ந்துகொண்டு உட்கார்ந்திருக்கானே! ... என்று தனக்குள் வியந்து கொண்டான், முருகப்பன்.

"இப்பொழுது எதற்காக இங்கே வந்தாய்?...நள்ளிரவில் என் பிரா

# ○ கிருதிமணி மாலை ○



"பாரிஜாதம்" நேயர்கள பெருமை கொள்ளும்படியான விஷயம் இந்த மாதம் 14வ நடந்தது. "அறிமுகப் படுத்துகிறோம்" என்னும் தலைப்பில் முதலாவதாக ஸ்ரீ ரங்கராமானுஜ ஐயங்காரைப்பற்றி எழுதும்போது, அவருக்கு தியாகய்யர்வாள் கீர்த்தனைகளில் உள்ள ஆர்வத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தோம். ஸ்ரீ ஐயங்கார் தியாகய்யர்வாளுடைய 400 கீர்த்தனைகளை "கிருதிமணிமாலை" என்று வெளியிட்டு விட்டார். இந்தப் புத்தகம், வெளிவருவதற்காக அவர்பட்ட சிரமம் கணக்கில்லை! ஆனாலும், டி. டி. கே., டாக்டர் சுப்பராயன், இம்பீரியல் பாங்க் ஸ்ரீ ராமசுப்பன் இவர்கள் உத்சாகத்தினாலும், பல பத்திரிகாசிரியர்களுடைய பக்க பலத்தினாலும் ஸ்ரீமான் ஐயங்கார் தியாகப் பிரம்ம மகோற்சவ சபை செய்யாத ஓர் அரிய பெரிய காரியத்தைச் சாதித்து விட்டார். இந்தப்புத்தகம் சங்கீத வித்வான் ஒவ்வொருவர் கையிலும் அவசியம் இருக்கவேண்டும் என்று நாம் சொல்லப்போவதில்லை. ஆனால் பாட்டுக் கற்றுக் கொள்ளும் எல்லாச்சிறுவர், சிறுமிகளும் இந்தப் புத்தகத்தை அவசியம் வாங்க வேண்டும். தியாகய்யர்வாளின் கீர்த்தனைப் பொக்கிஷம் ஒவ்வொரு வீட்டுப் புத்தக அலமாரியிலும் அவசியம் இருக்க வேண்டும். ஆதலால் தமிழராய்ப் பிறந்தவர்கள் எல்லோருமே இதை வாங்குவார்கள் என்பதில் ஐயமில்லை. விலை வெகு சரசம். ரூ 5-8-0 தான். கிடைக்குமிடம் 'சபர்மதி', ஸேட்காலனி, எழும்பூர், சென்னை. கடைசியாக 'ஹோ அண் கோ' ஸ்ரீ எம்பெருமானார் செட்டியார், இந்தப்புத்தகத்தை வெகு அழகாக, இலவசமாக அச்சிட்டுக் கைங்கர்யம் செய்திருப்பதைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது.

— "ராஜ்"

---

ணை எதற்காக வாங்குகிறாய்?" என்று கோபமும், ஆத்திரமும் தொனிக்கும் குரலில் கேட்டாள் ரோகிணி.

"என்னைக் கண்டால் உனக்கு ஏன் இவ்வளவு ஆத்திரமும் கோபமும் உண்டாகின்றன?... ரோகிணி, என்னவிருந்தாலும் நான் உன் புருஷனல்லவா?... நீ என் மனைவியல்லவா?" என்றான் வந்தவன். அவன் முகத்தின் இயற்கை விகாரத்தை அவனுடைய 'கிருதா மீசை' பன்மடங்கு மிகைப்படுத்திக் காண்பித்துக் கொண்டிருந்தது.

"நீ என் புருஷன்!...நான் உன் மனைவி!...... வெட்கமில்லை? தாலி கட்டியவன் முகத்தைப் பார்க்க எனக்கு வெட்கம் பிடுங்கித்தின்கிறது!...ஹும்..இன்னும் உனக்கு இந்தச் சபலம் விடவில்லையா?... கொண்ட மனைவியைக் கைவிட்டுத் தவிக்க வைத்து, ஊரிலுள்ள போக்கிரிகளுடன் சேர்ந்து கொண்டு சுற்றிக் கொம்மாளம் அடித்த பொழுது எப்படியிருந்தது?...எவ்வளவு நாள் என்னைப் பட்டினி போட்டுச் சித்திரவதை செய்திருக்கிறாய்? எவ்வளவு தடவை என்னை அடித்து ஹிம்சித்

திருக்கிருய்? ஈ வி ர க் க ம ற் ற பாவி!......"

ரோகிணியின் கண்கள் கோபத்தால் சிவந்திருந்தன. அவள் வார்த்தைகள் நெருப்பைக் கக்கின.

"மாதம் பதினயிரக் கணக்கில் சம்பாதிக்கும் நீ எனக்கு—உன் புருஷனுக்கு—ஒரு நூறு ரூபாய் தருவது தான் பிரமாதமோ?...ஹூம்... எனக்கு இப்பொழுது அவசரமாக நானூறு ரூபாய் பணம் வேண்டும். கொடு" என்றான் வந்த ஆசாமி.

ஒரு தம்பிடி கூடத் தரமாட்டேன்!"

• "முடியுமா, முடியாதா?" என்று அவன் கடுமையான குரலில் கேட்டான்.

"முடியாது!..."என்று கண்டிப்பாகப் பதிலளித்தாள் ரோகிணி.

"ஹூம்... எனக்குக் கொடுக்க முடியாது என்ருல் நான் என்ன செய்வேன் தெரியுமா?—நாளைக் காலையில் இந்த உலகம் முழுவதும் அறியும்படி, நீ என் சொந்த மனைவி தான் என்பதை வெளிப்படுத்திவிடுவேன்!—அப்புறம் கேட்பானேன்!.. உன்னைப்பற்றி உன் பக்தர்களும், உன் நண்பர்களும், இதர நடிகர், நடிகைகளும் என்ன நினைப்பார்கள் என்பதைப்பற்றி நான் சொல்ல வேண்டியதில்லை" என்ருன் அந்த முரடன். அவன் குரல் கேட்பதற்குப் பயங்கரமாயிருந்தது.

"அப்படியானல் என்னைப் பயமுறுத்துகிருயோ? ஹூம்— என்னிடம் தற்சமயம் பணம் ரொக்கமாக இல்லையே!..."என்ருள். அவள் குரல் கம்மிப் போயிருந்தது.

"பணம் ரொக்கமாக இல்லையென்ருல், உன் நகைகளில் ஏதாவது ஒன்றைக் கொடு... எனக்கு ரொம்ப அவசரமாகப் பணம் வேண்டியிருக்கிறது..."

"நகைகளை நான் தொடமாட்டான்!—இன்னும் ஒன்றிரண்டு நாள் கழித்து வந்தால் பணமாகவே தருகிறேன்...பேசாமல் போய்விடு..."

நீ நகையைக் கொடுக்கப் போகிருயா, இல்லையா?—என்று சொல்லிக் கொண்டே அவன் எழுந்தான்.

"அட பாவி!" என்னைப் பலவந்தம் செய்யாதே!...பேசாமல் போய்விடு—இல்லையேல் டெலிபோனில் போலீசைக் கூப்பிடுவேன்!"

"உன்னை அவ்வளவு தூரம் செல்வதற்கு நான் விட்டுவிடுவேனு, என்ன?—நீயாகத் தராவிட்டால் இதோ உன்னைக் கட்டிப் போட்டு விட்டு, நானகவே எடுத்துக் கொள்கிறேன்!—"

"திருடன்! திருடன்!!" என்று கத்தினுள் ரோகிணி.

வெளியே நின்று கொண்டு, மௌனமாக அதுவரை அந்த நாடகத்தைக் கவனித்துக் கொண்டிருந்த முருகப்பனல் அதற்குமேல் பொறுக்க முடியவில்லை. தன்னையும் மறந்தவனய், தான் வந்த காரியத்தையும் மறந்தவனய்—உள்ளே நுழைந்தான். ஆத்திரம் தீர, அந்த முரடனின் முதுகின் மீது ஒருகுத்து விட்டான்! முரடன் வலி பொறுக்க முடியாமல் கீழே சாய்ந்தான்.

"சமயத்தில் தெய்வம் போல் வந்து காப்பாற்றினீர்கள்! நீங்கள் வந்திராவிட்டால் என்ன நடந்திருக்கும் என்று சொல்ல முடியாது—என்னைக் கொலை செய்தாலும் செய்திருப்பான்!" என்று நன்றியறிதலுடன் கூறினுள் ரோகிணி.

"நான் என்ன பிரமாதம் செய்து விட்டேன்? — என் கடமையைத்

தானே செய்தேன்!—தெரு வழியே சென்று கொண்டிருந்தேன்—ஏதோ ஒரு சப்தம் கேட்டது. உடனே ஓடிவந்தேன்'' என்றான் முருகப்பன்.

'நீங்கள் செய்த உபகாரத்திற்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?' என்றாள் ரோகிணி.

தன்னை அடித்துக் கீழே தள்ளிய முருகப்பனை எரித்து விடுபவன் போல் பார்த்தான் வந்தவன். முருகப்பனின் புஜபலத்தின் தன்மையை நன்றாக உணர்ந்து கொண்டதால், அவனுடன் மேலும் எவ்விதமான சச்சரவும் வைத்துக் கொள்ளாதிருப்பதே நலம் என்று தோன்றியது. மௌனமாக எழுந்து ரோகிணியையும் முருகப்பனையும் முறைத்துப் பார்த்துவிட்டு வெளியே சென்றான்.

''இனிமேல் இந்தப் பக்கம் உன் முகத்தைக் காண்பித்தாயானால், உன் முதுகுத் தோலை உரித்து விடுவேன். ஜாக்கிரதை!'' என்றான் முருகப்பன். அவன் திரும்பிக்கூடப் பார்க்காமல் நகர்ந்தான்! அவன் சென்று, சிறிது நேரத்திற்குப் பிறகு, ரோகிணியிடம் விடை பெற்றுக் கொண்டான் முருகப்பன்.

அவள் பங்களாவிலிருந்து வெறுங் கையுடன் வெளியேறிய போதிலும் அவன் உள்ளம் விவரிக்க வொண்ணாத இன்பத்தால் நிறைந்திருந்தது.



# அறிமுகப் படுத்துகிறோம்

## 4 ஸ்ரீரங்கம் கண்ணன்

சங்கீத உலகில் எவ்வளவோ பாடகர்கள் தோன்றியிருக்கிறார்கள். இவர்கள் பிரகாசித்து முன்னுக்குவர வேண்டும் என்றால் கச்சேரிகள் பல செய்ய வேண்டும். ஆனால் இவர்களுடைய பெயர் பிரசித்தமானால்தான் கச்சேரிகள் கிடைக்கும்! எப்படி இருக்கிறது நிலைமை!

இந்த நிலைமையை ஒருவாறு சமாளித்து இளம் வித்வான்களுக்கு உற்சாகம் கொடுக்கிறது ரேடியோ நிலையம் என்று சொல்லலாம். இம்மாதம் 4-ந்தேதி மாலை 6-40க்கு ரேடியோவைத் திருப்பினதும் "ராமநன்னு போரவ" என்னும் ஹரிகாம்போதி கீர்த்தனையை ஒருவர் சுகமாகப் பாடிக்கொண்டிருந்தார். அதற்கு மேல் ஆனந்த பைரவியில் "மரிவே" என்னும் பாட்டும் "கர்நாடக தேவகாந்தாரியில்" புதிதாகமுழங்கும் "எப்படிப்பாடினரோ" என்னும் பாட்டும் வெளிவந்தன. பாடியவர் ஆர். கண்ணன். பாடியவரையில் கச்சிதமாகவும், செவிக்கு இன்பமாகவும் இருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். ஆனந்தபைரவி கீர்த்தனம் நன்றாகவே யிருந்தது.

இப்படிப்பட்ட இளம் வித்வான்' பார்ப்பதற்கு ரொம்ப அடக்கமாகவும், சாதுவாகவும் இருக்கிறாரே என்று பார்த்தால் சரக்கு இவரிடம் இருப்பதினால் தான் என்று தெரிய வந்தது. 25 வயதுதான் ஆகிறது. இதற்குள் இவருக்கு ஒரு பட்டமும் கிடைத்திருப்பதாகத் தெரிகிறது. பங்களூர் மகாஜன சபாவில் சமீபத்தில் இவருக்கு 'சங்கீத சுதாகர' என்ற பட்டமும் அளிக்கப்பட்டதாம். இதுவரை நூறு கச்சேரிகள் இவர் செய்திருப்பதாகக் கேள்வி. ஒரு சங்கீத வித்வான் என்று இருந்து விட்டால் இரண்டாயிரம் கச்சேரியாவது செய்ய வேண்டும் என்று ஸ்ரீ கண்ணன் ஆசைப்படுகிறார். இவர் பரபரப்பையும் போகிற போக்கையும் பார்த்தால் இவர் ஆசைப்படுவது அசாத்தியமான காரியமென்று யார் சொல்ல முடியும்? —பி. ஆர்.

# பாப்பா பக்கம்



ஒரு ஊரில் நிர்மூடன் என்ற அரசன் ஒருவன் இருந்தான். அவன் சதா குடிகளை நடக்காத காரியங்களைச் செய்யும்படி தொந்தரவு செய்வான். அவனை எதிர்த்துச் சொல்பவர்களுக்கோ மரண தண்டனை விதிக்கப்பட்டது. அதற்குப் பயந்து அவன் சொல்வதற்கெல்லாம் தலை ஆட்டுவார்கள் மந்திரிகள், பிரஜைகள் எல்லோரும். ஒருநாள் அரசன் மந்திரியைக் கூப்பிட்டு "இன்று சாயங்காலத்திற்குள் நான்கு வடிகட்டிய முட்டாள்களை என் சமூகத்திற்கு அழைத்து வரவேண்டும். இன்று இது தான் என் உத்திரவு" என்றான்.

மந்திரி என்ன செய்வான், பாவம்! பதில் சொன்னால் அரசனுக்குக் கோபம் வரும். 'விதியே! என்று அரசன் உத்திரவை, நிறைவேற்ற முட்டாள்களைத் தேடி போனான், மந்திரி. அவன் போகும் வழியில், சோளக்கொல்லை ஒன்று இருந்தது. அதில் ஒருவன் ஆடாமல், அசையாமல் நின்கொண்டு இருந்தான். "நீ ஏன் இங்கே நிற்கிறாய்?" என்று கேட்டான் மந்திரி. "ஐயோ! சோளக்கொல்லைப் பொம்மையை யாரோ எடுத்துப் போய்விட்டார்கள். நான் போய் புதிதாக ஒன்று செய்துகொண்டு



வரும்வரை, நானே பொம்மைமாதிரி நிற்பதென்று தீர்மானம் செய்தேன்'' என்றான்.

பார்த்தான் மந்திரி. "சரி, நம்பர் ஒன்று'' என்று சொல்லிக்கொண்டு அவனைத் தன்னுடன் அழைத்துப்போனான். கொஞ்சதூரம் போனதும், ஒருவன் தூக்கமுடியாத மூட்டையைத் தலைமேல் கட்டிக்கொண்டு கழுதைமேல் போவதைப் பார்த்து, "அப்பா! மூட்டையைக் கழுதைமேல் கட்டிவிடுவதுதானே? நீ அதன்மேல் உட்கார்ந்துகொண்டு தலைமேல் வைத்திருப்பானேன்? என்று கேட்டான் அவன்.

"என் கழுதையின் அருமை உங்களுக்கு என்ன தெரியும்? பாவம், அதற்கோ வயதாய் விட்டது. பளுவு தூக்கமுடியாது. அதனால்தான் இரக்கம்கொண்டு நான் மூட்டையுடன் உட்கார்ந்திருக்கிறேன்'' என்றான்.

மந்திரி "நம்பர் இரண்டு'' என்றி கூறி அவனையும் கூப்பிட்டுக்கொண்டு, அரண்மனை வந்தான். "அரசே, உங்கள் உத்தரவுப்படி இருவரும் வந்திருக்கிறார்கள்'' என்று கூறி அவர்களின் முட்டாள்தனத்தையும் தெரிவித்தான்.

அரசன் "சரி நான் நால்வரல்லவா, அழைத்துவரச் சொன்னேன். மற்ற இருவரும் எங்கே?'' என்று கேட்டான். மந்திரி "மற்ற இருவரும் நான் சொல்லி தெரியவேண்டுமா? என்னைக் கோபிக்கவேண்டாம். முட்டாள்களைப்போய் அழைத்துவரச் சொன்ன தாங்கள் ஒன்றும், இந்தக் காரியத்திற்காக தேடிக்கொண்டு போனேனே, நான் ஒன்றும், ஆக நால்வரும் சரியாய் விட்டது'' என்றான்.

## உங்களுக்குத் தெரியுமா?

தாவர வர்க்கங்களில் சீக்கிரமாக வளரும் செடி மூங்கில்தான். மூங்கில் மரம் ஒரு நாளைக்கு மூன்றடி வளருகிறது.

*   *   *

வால் நக்ஷத்திரம் என்று சொல்லுகிறார்களே, அதற்கு நிஜமாக வாலுண்டா? இல்லை. அந்த நக்ஷத்திரம் சூரியனை நெருங்கும் பொழுதுதான் நம் கண்ணுக்குத் தெரிகிறது. அப்பொழுது அதனருகில் சூரியனுக்கு எதிர்ப்புறத்தில் காணும் ஆவி ரூபத்தைத்தான் நாம் "வால்'' என்கிறோம்.



# முட்டை உலகம்

நீங்கள் எல்லாம் என்ன நினைத்துக் கொண்டிருப்பீர்கள்? முட்டைக்குள்ளே கோழிக்குஞ்சு அடங்கி முடங்கிக் கொண்டு கிடக்கும் என்று தானே? அதுதான் இல்லை. முட்டைக்குள் இருக்கும் கரு வளர வளர கோழிக்குஞ்சாக மாறும். கோழிக்குஞ்சு பாதி உருவம் அடைந்திருக்கும் போது எப்படி இருக்கிறது, பாருங்கள். குஞ்சு அழகிய ஒரு சின்ன கட்டிலில் படுத்துத் தூங்குகிறது. பக்கத்தில் காற்று வருவதற்காக அழகிய ஜன்னல். பக்கத்தில் ஒரு மேஜையில் காப்பி. உட்காருவதற்கு ஒரு அழகிய சோபா. இவ்வளவுடன் கோழிக் குஞ்சு அழகாகத் தூங்குகிறது. முட்டையின் மேல் இரண்டு கோழிக் குஞ்சுகள் உள்ளே பார்க்கின்றன. அவைகளுக்கும் தாங்கள் அவ்வாறு இருந்த ஞாபகம் வருகின்றனவோ என்னவோ?

எழுதியவர்: ஆர். நாராயணசாமி, 4-ம் பாரம்,
ஹிந்து ஹைஸ்கூல், திருவல்லிக்கேணி.

# அவன் செய்த தவறு

—: த்விஜன் :—

அந்தி மங்கும் நேரம். மறையும் கதிரவன் தன் பொற்கிரணங்களைத் தூவி இயற்கையை அழகு படுத்திக் கொண்டிருந்தான். அந்தத் தோட்டத்திலிருந்த செடிகள், தங்கள் மலர்களின் மணத்தை வெளியேற்றியபடியே, அசைந்து கொடுத்தன. காலையில் இறை தேடிச் சென்ற பறவையினங்கள், வானில் சஞ்சரித்து ஓலமிட்டன. கானவெள்ளத்தை, காதல் கீதமாக வெளியிட்டன குயிலினங்கள். மொத்தத்தில் இயற்கையே பொலிவு நிறைந்து தென்பட்டது.

தோட்டத்தின் நடுவேயிருந்த குடிசையின் எதிரில், ஒரு கட்டிலில் உட்கார்ந்தபடியே இவ்வழகைப் பருகிக் கொண்டிருந்தான் சின்னான். அவன் முகத்தில் சாந்தி நிறைந்திருந்தது. தள்ளாத வயதிலும் வேலை செய்துவந்தான் அவன். வயிற்றுக் கடனுக்காக அல்ல. அவனுக்கு வேண்டுமென்றால் எசமான் என்றும் சோறு போடுவார். ஆனால், தான் கண்ணுக்குக் கண்ணாகவளர்த்த செடிகள் வீணாகாதிருக்க அவன் கஷ்டப்பட்டான். எல்லாவற்றிற்கும் அவனுடைய உயிர் நாடி அத்தோட்டத்தின் சின்ன எஜமானி! — எஜமானின் ஒரே மகள்!

அன்றைக்கு முதல் நாள் தான் அவனுடைய எஜமான் அவனிடம் சொன்னார். தன் மகள் நளினிக்கு ஒரு பெரிய பணக்காரரின் மகனைப் பார்த்திருப்பதாக. அப்பொழுதே எஜமானிடம் சொல்ல நினைத்தான். அவன் மனம் துடித்தது. ஆனால் அந்த எஜமானிடம் அப்பொழுது சொல்லத் தைரியம் வரவில்லை. சமயமறியாது எதாவது செய்தால் நளினியின் துக்கம் அதிகரிக்கும்படியாக எதாவது நடந்துவிடுமோ என்ற பயம்.

ராகவன் பணக்காரனல்ல. சாதாரண உபாத்தியாயரின் மகன். ஆனால் அன்பு என்னும் தனம்தான் அவனிடமிருந்தது. தன் வீட்டிற்கு நாலாவது வீட்டிலிருக்கும் நளினியுடன் அவன் பழகுவதை யாரும் தடைசெய்யவில்லை.

நளினியின் ஒன்பதாவது வயதில் சின்னானுக்கு அறிமுகம் செய்யப்பட்டான் ராகவன். "ராகவன் ரொம்ப நல்லவண்டா, சின்னான்! உனக்குத் தெரியாது. பள்ளிக்கூடத்திலே கூட இவன்தாண்டா முதல்" என்று பலநாள் பழகினவள் போல் சொன்னாள்.

அது நடந்து ஐந்து வருஷங்கள் சென்றுவிட்டன. பொதுவாக அன்றுவரை அவர்கள் இணைபிரியாமலே இருந்தார்கள்.

எஜமான் காலையில் சொன்ன விஷயம் சின்னான் மனதைச் சிக்கலிலாழ்த்தியது. பணக்காரனாயிருந்தால் போதுமா? நளினி சரியென்று சொல்லிவிடுவாளா? அப்படிச் சொன்னாலும் அவள் மனம் ஒப்புமா? தான் விரும்பிய பெண்ணைக் கட்டிக்கொள்ளத் தானே, தகப்பனிடம் சண்டை போட்டுச் சொத்தையும் இழந்து அவன் வேலைக்கு வந்தான். ஒன்றுமறி

யாத, படிப்பும் நாகரிசமும் தெரியாதஅவனேஅப்படிச்செய்திருக்கும்போது நளினி மனமொப்பி, பணக்காரன் என்பதற்காக ராகவனன்றி வேறொருவனை விரும்புவாளா? சிந்தனையில் மூழ்கிவிட்டான் சின்னான்.

* * *

"டேய் சின்னான்! ஐயாவை ஸ்டேஷன் வரைக்கும் கொண்டு விட்டுட்டு வாடா. அவசர காரியம் இருக்குதாம். அவர் அப்பாவும், அம்மாவும் அடுத்தவண்டிக்குப் போவாங்க. சீக்கிரம் கட்டு வண்டியை" என்றார் எஜமான்.

அந்த பணக்காரப் பிள்ளை பெண்ணைப் பார்ப்பதற்காக அன்று வந்திருந்தான், தந்தையருடன்.

பையனைப் பார்த்த பிறகு சின்னானுக்கே கூட மனம் என்னவோ செய்தது. அவன் அழகன் மட்டுமல்ல. கம்பீரமாக இருந்தான்.

கதவருகில் நின்றபடியே அறையில் நடப்பதைக் கவனித்துக் கொண்டிருந்தான் சின்னான். நளினி புத்தாடையில் அழகாக நடந்து வந்துஅந்தப் பிள்ளையை நமஸ்கரித்தபொழுது அவள் முகத்தில் வெட்கமும் ஒருவித பயமும் தென்பட்டன. அவள் முக பாவத்தை சின்னான் அவள் உள்ளம் அடையும் துன்பத்தின் எதிரொலியாக நினைத்தான்.

கூவி அழுது தன் எண்ணத்தை வெளிப் படுத்தவேண்டும் என்று தோன்றிற்று. ஆனால் தைரியம் வரவில்லை.

நளினியை இப்பெரும் கஷ்டத்திலிருந்து (அவன் அப்படித்தான கருதினான்) தப்புவிக்க தன்னாலான உதவியைச் செய்ய யோஜனை செய்துக்கொண்டிருந்த அவனுக்கு எஜமானுடைய இந்த உத்தரவு உத்சாகம் கொடுத்தது. அவன் சிற்றறிவில் ஒரு யுக்தி தோன்றிற்று

வண்டியைப் பூட்டிக்கொண்டிருந்த சின்னான் கண்ணில் ராகவன் தோன்றவே, இன்னும் தீவிரமாகத் தன் யுக்தியைப் பிரயோகிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டான்.

'ஜங் ஜங்' என்ற சப்தத்துடன் மயிலைக் காளை வண்டி சென்று கொண்டிருந்தது. வெகு நேரம் சும்மாயிருந்த பிறகு சின்னான் மெதுவாகப் பேச ஆரம்பித்தான்.

தான் சிறு வயதில் தான் விரும்பிய பெண்ணை மணப்பதற்கு ஏற்பட்ட தடை, அதற்காகத் தான் செய்த தியாகம், கடைசியாக இந்த எஜமானிடம் தோட்டக்காரனாக அமைந்ததுவரை எல்லாவற்றையும் கதை போல் சொன்னான். முடித்துக்கொண்டே, "சாமி! நான் ஒண்ணு சொல்லறேன். கோவிச்சுக்க மாட்டீங்களே?" என்று கேட்டான்.

"நான் ஏனப்பா கோவிச்சுக்கறேன்?" என்று உள்ளிருந்தவர் சொன்னார்.

"ஏன் சாமி, இந்த பணம் தான் சாமி முக்கியமா? அனேகம் பேர் ஆசையைக் கெடுக்குது! ஒண்ணு பெண் ஏழையா இருக்குது. இல்லேன்னா, பிள்ளை ஏழை. கடைசியிலே என்னன்னா அவுங்க ஆசை அப்படியே முறிஞ்சு போகுது. ஒரே கஷ்டப் படறாங்க."

"ஆமாம். பணம்தான் எல்லாத்துக்கும் காரணம்."

"இப்போ ஏன் வெளியே போகணும்? நம்ம சின்ன எஜமானி விஷயத்திலே கூட........."

"சின்ன எஜமானி யார்?

"இது தெரியாதுங்களா? அதான் நம்ம கண்ணு நளினிங்க."

"அவளுக்கு என்ன?......"

"அடடா! கோவிச்சுக்காதீங்க, சாமி! தெரியாமே உளறிட்டேன்." அப்படிச் சொன்னால்தான் தன் காரியம் நடக்கும் என்று சின்னனுக்குத் தெரியும். அவனுடைய ஆர்வத்தைக் கிளப்பிவிட்டு சும்மா இருந்தான்.

"பரவாயில்லே. சும்மா சொல்லு, அப்பா!"

"கூடாதுங்க, எஜமான்! நான் அதெல்லாம் சொல்லக்கூடாதுங்க."

"எல்லாம் சொல்லலாம், சொல்லு அப்பா. நான் அவுங்க கிட்ட சொல்லமாட்டேன்."

"உங்ககிட்ட சொல்லக்கூடாது. சொல்லாவிட்டாலும் விடமாட்டீங்க போலிருக்கு. சரி, சொல்றேன். அதான் நம்ம நளினி இருக்குதுங்களே, அதுக்கு எங்கிட்ட ரொம்பப் பிரியம் எசமான். சும்மா என்னண்டை வந்து கதை கேட்கும். பள்ளிக்கூடத்திலே படிக்குதே அதை யெல்லாம் என்னைக் கேட்டு, நான் தெரியாமெ விழிப்பதைப் பார்த்துச் சிரிக்கும். அப்போ ஒரு நாளைக்கு ஒரு ஆப்பிளைப் பிள்ளையை சிநேகம் பண்ணிகிட்டு எங்கிட்டக் கொண்டுவந்து ஸ்நேகம் செஞ்சுது. அந்தப் பிள்ளைகூட உங்க வயசுதாங்க இருக்கும். இப்போ, நளினியோடெ ஒன்பதாவது வயசுலேருந்து ரெண்டு பேரும் அந்நியோன்னியமாத்தான் பழகி வராங்க. ஆனால் பாருங்க, நம்ம ராகவன் இருக்காரே—அதான் நளினியோடெ—பழகுதுன்னேனே அந்தப் பிள்ளை பணக்காரர் இல்லிங்க. அதனாலே........." என்று மெல்ல இழுத்தான் சின்னன்.



மனைவி: ......... சினிமாவில் என்ன நடந்து கொண்டிருக்கிறது?

புருஷன்: ரீபேர் நடந்து கொண்டிருக்கிறது.

மனைவி: (ஞாபக மறதியாக) அது இங்கிலீஷ் படமா? ஹிந்திப் படமா?

---

"அதனாலெ தான் பணக்கார இடமா பாத்தாரா?"

"ஆமாங்க."

"அது சரி! நிசமாவே நளினி அந்தப் பிள்ளை மேலே ஆசை வைச்சிருந்தா அது அப்பாகிட்டெ சொல்லியிருக்காதா?"

"சொல்லி என்னுங்க பிரயோசனம்? நளினி பொண்ணுதானுங்களே. அப்பா பாத்து கட்டிக்கச் சொல்லற ஆளுக்கு மாலைபோட வேண்டியதுதானுங்களே. உங்களை நமஸ்காரம் செஞ்சுதே நளினி, அப்பொ எவ்வளவு வருத்தப்பட்டுது கண்ணுன்னு கவனிச்சீங்களா?"

சில நிமிஷங்கள் நிசப்தம் நிலவிற்று. இருவரும் பேசாமலே சென்றனர்.

தூரத்தில் ரயில்வே ஸ்டேஷன் தென்பட்டது. உள்ளே உட்கார்ந்திருந்த பிள்ளை கூப்பிட்டான். "சின்னன்! நீ சொல்லுனதைக் கேட்டால் என்னமோ போலிருக்கு. நான் ஒன்று சொல்றேன். அப்படிச் செய்யறயா?"

"ஊம். நீங்க சொல்றதைச் செய்யத்தானுங்களே நான் இருக்கேன்."

"நான் ஊருக்குப் போயித்தான் லெட்டர் போடுவேன். அதுக்குள்ளே உங்க நளினிகிட்ட, 'ராகவனும் அவளும் நல்லாயிருக்கணும்'னு நான் சொன்னேன்னு சொலறயா ?"

"நீங்க சொல்றது புரியலேயங்களே ?"

"நான், நளினியை அவள் இஷ்டப்படி ராகவனேயே கலியாணம் செய்துக்கச் சொன்னேன்னு சொல்லறயா ?"

"சரிங்க எசமான்-" என்றபொழுது அவன் பல்லற்ற வாயில் தோன்றிய புன்னகை அந்தப்பிள்ளையின் இதயத்தின் அடியைத் தொட்டது என்று கூடச் சொல்லலாம்.

ரயில் வண்டியிலேற்றிவிட்டு, மனத்தில் குதூஹலமும் வெற்றியும் சூழ, வண்டியை ஓட்டிக்கொண்டு திரும்பினான் சின்னான். தன்னுடைய எதிர்பாராத வெற்றியில் பாட்டுக்கூட வெளி வந்து விட்டது அவனிடம்.

வெற்றியும் ஆனந்தமும் சூழ, ஏதோ நாடோடிப் பாட்டை முணமுணத்துக் கொண்டு கட்டிலில் உட்காந்திருந்தான் சின்னான்.

வன மோகினியே போல், தன்னுடைய புது அலங்காரத்துடன் அங்கு வந்தாள் நளினி. "அடடா! ஏது பாட்டு கீட்டெல்லாம் பலமாயிருக்கே! என்ன விசேஷம்? என்று கேட்டாள் நளினி.

"விசேஷம் தான், அம்மா! என் கண்ணு! உனக்கு சுகம் வந்தா எனக்கும் சுகம்தானே."

"என்னடா வேதாந்தம் பேசறயே. அது சரி! இந்தப் புடவை ரொம்ப நன்னா யிருக்கோ?"

"ஓ! அழகா யிருக்கம்மா. ராஜாத்தி போல யிருக்கு."

"இன்னிக்கு என்னைப் பார்க்க ஒரு பிள்ளை வந்தாரே, அவர் எப்படி அழகாயில்லே? எவ்வளவு நன்னாப் பேசறார் பாத்தியா ?"

"ஆமாம் அம்மா !"

"அவரை வண்டியிலே நீ கூட்டிண்டு போனயே, என்னடா சொன்னார் ?"

"ஒண்ணும் சொல்லலேயே !"

"நிஜமாவா! வாயை மூடிண்டு ஊமை போலவே போனீங்களா, மூன்று மைலும்?"

"ஆமாம்."

"நிஜமாவா? பொய் சொல்லரே. உன்னாலேதான் ஐந்து நிமிஷம் வாயைக் கட்டிண்டு இருக்கமுடியாதே."

"அவர் ஒண்ணும் சொல்லலே கண்ணு. நான்தான் சொன்னேன்"

"என்ன சொன்னயாம் ?"

"நீ நமஸ்காரம் பண்ணறப்போ மனக்கஷ்டப்பட்டதைப் பார்த்தேன். என் மனசு கேக்கலே. நம்ம ராகவ அய்யா இருக்கறப்போ, இவரைப் போய எசமான் பாத்தாரென்று எனக்கு ரெம்ப கஷ்டமாயிருந்திச்சு! என்ன வந்தாலும் வருதுன்னு, வண்டியிலே போறப்போ, எல்லாம் சொல்லீட்டேன். அவர் கூட..."

"அவர்கூட என்னடா? உன்னே யார்டா இதெல்லாம் போய்ச் சொல்லச் சொன்னது ?" என்று கோபமாகக் கேட்டாள் நளினி.

"இல்லேம்மா, அதெல்லாம் ஒண்ணும் ஆவாது. நம்மய்யாக்கு ஒண்ணும் தெரியவே, தெரியாதும்மா. உன்னே அவர் கலியாணம் பண்ணிக்கலேன்னு ஐயாவுக்கு எழுதப்போருரும்."

"கலியாணம் பண்ணிக்கமாட்டேன்னு ? நிஜமாகவா ?"

"ஆமாம்மா, அவரும் சிறுவயசு தானே கண்ணு ? ஆசைன்னு என்னென்னு தெரியாதா ? நான நம்ம ராகவ அய்யாவைப்பத்தி சொன்னதும் அவர் உன்கிட்ட ஒண்ணு சொல்லச் சொல்லச் சொன்னுர். அது என்ன தெரியுமா ?............ நிஜம்மாதான் அம்மா. நீங்களும் ராகவ அய்யாவும் சுகமாயிருக்கணும்னு உங்கிட்ட சொல்லச் சொன்னுர் அம்மா."

"நிஜமாவா! அடகஷ்டகாலமே! உன்னே யார்டா இதையெல்லாம் அவர் கிட்ட உளறச்சொன்னது? என் அதிர்ஷ்டம் தான் அவர் வந்தார்னு நினேச்சேனே." என்று ஆழ ஆரம்பித்து விட்டாள் நளினி.

"ஏம்மா, கண்ணு ஏன் அழறே !"

"ராகவனேக் கல்யாணம் பண்ணிக்க முடியாதுடா. அவன் எனக்கு அண்ணு முறைடா, சின்னுன். அண்ணுவைப் போலத்தாண்டா ராகவனேடே பழகறேன். அவன் சொல்லித் தாண்டா இந்தப் பிள்ளேயை அப்பா பார்த்தார். நீ வந்து கெடுத்துட்டயேடா, சின்னுன்" என்று அழுதாள் அவள்.

"பெண்கள் உள்ளத்தை அறிய முடியாது என்று பெரியவங்க சொல்ருங்களே, அது எவ்வளவு நிசம்?" என்று கூறிப் பிரமித்து நின்ருன் சின்னுன்.



● முதல் திருடன்: நகைகளே யெல்லாம் விட்டுவிட்டு ஏன் நாற்காலியை எடுக்கிருய் ?

இரண்டாவது திருடன்: சில மரசாமான்களேக் கொண்டுபோய் உடைத்து விறகாக பிளாக் மார்க்கட்டிலே விற்ருல் எவ்வளவு பணம் கிடைக்கும் தெரியுமா ?



● "என் மனேவிக்கு ஞாபக மறதி வியாதிக்கு ஒரு நல்ல வைத்தியம் கண்டுபிடித்திருக்கிறேன்."

"அது என்ன?"

"அவள் அடிக்கடி ஞாபகப் படுத்திக்கொள்ள வேண்டிய விஷயங்களே ஒரு கடுதாசியில் எழுதி நிலேக்கண்ணுடியருகில் ஒட்டிவிடுகிறேன்.





# நாகையாவின் தியாகையா

சினிமாத் துறையில் பிரவேசித்த பலனை ஸ்ரீ நாகையா அடைந்து விட்டார். தியாகராஜ சுவாமிகளின் பாத்திரத்தை ஏற்று நடிக்கும்படியான பாக்யம் அவருக்குக் கிடைத்து விட்டது. எந்தபாகத்தை எடுத்துக் கொண்டாலும் அந்தப் பாகமாகவே மாறிவிடும் நடிப்புத் திறமை இயற்கையாகவே நாகையாவிடம் உண்டு. இந்தப்படத்தில் ஆரம்பம் முதல் கடைசிவரையில் தியாகையாவாகவே திகழ்கிறார். பாடல்களின் பாவத்தை உணர்ந்து அனுபவித்துப் பாடக்கூடிய நாகையா பாவத்தை முதன்மையாகக்கொண்டு சாகித்யங்கள் இயற்றிய தியாகையாவாகத் தோன்றுவதற்குப் பொருத்தமானவர்தான் என்பதில் சந்தேகமில்லை. அதற்கேற்ற சாரீரப் பொருத்தம் பெற்ற நாகையா, தியாகையாவாக நடிப்பதற்கேற்ற சரீரப் பொருத்தம் இல்லாமல் போய்விடுவாரோ என்று நான்பயந்ததுண்டு. ஆனால்படத்தைப் பார்த்தபிறகு நமது நாட்டில் மேக்-அப் கலை எவ்வளவு முன்னேறியிருக்கிறது என்பது தெளிவாகிறது.

நாம் படித்திருக்கும் பல கதைகளில் சரஸ்வதிதேவி பூலோகத்திற்குக் திடீர் விஜயம் செய்து முதன் முதலில் தன் கண்ணில்பட்ட ஓர் ஆசாமிக்குக் கவிதை பொழியும் சக்தியைக் கொடுத்துவிட்டு மறைந்து விடுவதைப் பார்த்திருக்கிறோம். அந்த ஆள் கோவில் பூசாரியாக இருக்கலாம், சமையற்காரனாக இருக்கலாம். அல்லது ஆட்டிடையனாகவும் இருக்கலாம். தேவிக்கு அக்கறை கிடையாது, அவன் நாக்கில் கவிதை பாடும் சக்தியை எழுதிவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பாள்! ஆனால் தியாகையாவுக்குத் தெய்வீக அருள் கிடைத்தது பல விதங்களில் தகும். அவர் ஸ்ரீராம சந்திரமூர்த்தியைத் துதிக்க ஆவல்கொண்டிருந்தார்; ஆத்திரம் கொண்டிருந்தார்; கவிப்பிரவாகம் எடுத்தோடவில்லையே என்று கவலை கொண்டிருந்தார். இத்தகைய அவருடைய ஆவலைப் பூர்த்தி செய்யவே சரஸ்வதிதேவியின் குமாரராகிய ஸ்ரீ நாரதமுனி தியாகையாவை நேரில் சந்தித்து அவரை ஆட்கொண்டார். இந்த அம்சம் படத்தில் வற்புறுத்தப்பட்டிருப்பது ஒரு விசேஷமாகும்.

சரபோஜி மன்னன் அளித்த நிதியைவிட ராமனுடைய சந்நிதியைத் தான் விரும்புவதாகத் தன் தமையனாரிடம் எடுத்துச்சொல்லித் தர்க்கிக்கும் இடத்திலும், பாவசூன்யமாகப் பாடும் போலிக்கவிராயரிடம் சுய மாகத் தன் கட்சியை எடுத்து விளக்

கும் கட்டத்திலும், காணமற்போன ராமவிக்ரகத்தை ஆற்று வெள்ளத்தில் கண்டெடுத்த சந்தர்ப்பத்திலும் இப்படத்தில் நாகையாவின் நடிப்பு உச்ச நிலையை அடைகிறது.

தியாகய்யாவின் தமையனாக வருபவர் கச்சிதமாக நடித்திருக்கிறார். அண்ணியின் பாகத்தில் வரும் நடியை இந்தப் படத்தைப் பார்ப்பவர் யாரும் மறக்க முடியாது. தியாகய்யாவின் மனைவியான தர்மாம்பாளையும், தியாகய்யாவையும், சினிமா பார்ப்பவர்களையும் சேர்த்து அந்தமாது சிரோன்மணி ஒரு கலக்குக்கலக்கி விடுகிறாள் என்றே சொல்லவேண்டும்.

அடுத்தபடியாக தர்மாம்பாளாக வரும் ஸ்ரீமதி ஜயம்மா பர்த்தாவுக்கேற்ற பதிவிருதையாய், அவர் மனம் கோணமல், அவர் குறிப்பறிந்து நடக்கும் குணவதியாய் விளங்குகிறாள். ஏறக்குறைய அநேக காட்சிகளில் மௌனமாகவே தோன்றும் அவர் ஆயிரம் வார்த்தை பேசினாலும் வெளிப்படுத்த முடியாத பாவங்களைத் தன் கண்களாலும், உதட்டின் அசைவினாலும், முகபாவத்தினாலுமே வெளிப் படுத்திவிடுகிறார். தியாகய்யாவின் மேல் சாய்ந்து கொண்டே தர்மாம்பாள் உயிர் துறக்கும் கட்டத்தைப் பார்ப்பவர்களுக்கு அன்னை கஸ்தூரிபாய் உயிர் துறந்த சம்பவம் நினைவுக்கு வராமல் போகாது.

தியாகய்யர் பாடும்பொழுது அவருடைய சிஷ்யர்களும் கூடப்பாடி அப்பியாசம் செய்ததாகக் காட்டி இருந்தால் நன்றாக இருந்திருக்கும். அவருடைய பாடல்களைக் கூடப் பாடிவந்தது அவர் மனைவி ஒருத்திதான் என்று தோன்றும்படி காட்டியிருப்பது அவ்வளவு சரியல்ல.

நூறு வருஷங்களுக்குமுன் வாழ்ந்திருந்த ஒருவர் சரித்திரத்தில் அமானுஷ்யமான சம்பவங்கள் நடந்ததாகக் காட்டுவது சிறிதும் பொருத்தமில்லை. திருடர்கள் எறிந்த கற்கள் அவர்கள் மேலேயே திரும்பி விழுவது, புஸ்தகத்தைத் திருடப்போன தமையனுடைய துணியில் தீப்பிடித்துக் கொள்வது போன்ற காட்சிகள் அர்த்தமில்லாதவை.

எல்லாப் பொறுப்புகளையும் தாங்க வேண்டும் என்ற உற்சாகத்தில் ஸ்ரீ நாகையா இப்படத்தின் டைரெக்ஷனையும் மேற்கொண்டிருக்கிறார். ஆனால் "தியாகய்யா"வைச் சிருஷ்டி செய்யும் தொண்டில் பாட்டு நடிப்பை மாத்திரம் வழக்கம்போல் தான் மேற்கொண்டு, டைரெக்ஷனை வேறு சிறந்த கலைஞர் ஒருவரிடம் விட்டிருந்தால் படம் இன்னும் நன்றாக இருந்திருக்குமென்று நினைக்கிறேன். டைரெக்ஷன் என்பது தனிக்கலை. பயிற்சி பெற்ற நிபுணர்கள் செய்யவேண்டிய காரியமே ஒழிய, பிரதான நடிகரோ, அல்லது நடியோ, அல்லது அவர்கள் சொந்தக்காரரோ மேற்கொள்ளக் கூடிய காரியமல்ல என்பதை படம் பிடிக்கும் முதலாளிகள் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும்.

# சிறுகதைப் போட்டி முடிவு

நமது சிறுகதைப் போட்டிக்காக வந்த கதைகளில் பின்வரும் சிறுகதைகள் பாரிஜாதத்தில் பிரசுரத்துக்காக ஏற்றுக் கொள்ளப் பட்டிருக்கின்றன:

1. ஜெபுனிஸ்ஸாவின் தோல்வி—என். என் ராஜலக்ஷ்மி, c/o ராவ் பகதூர் கணபதி ஐயர், அட்வகேட், ஆண்டார் தெரு, திருச்சினுப்பள்ளி.

2. இன்பக் கனவு— எஸ். வைத்தியநாதன், 2, லக்ஷ்மிஸாதன், பிளாட்28, ஸ்டேஷன் ரோடு, மாதுங்கா ரோடு, பம்பாய்.

3. நீர்க்குமிழி— எஸ். கிருஷ்ணமூர்த்தி, 21/396, டலாங் ரோடு, பம்பாய் 19.

4. சங்கிலி— திருபுரசுந்தரி, 100, ராஜவீதி. பெரிய காஞ்சீவரம்.

5. பாம்பு மந்திரம்— ஆர். என். ராஜன், ஸென்ட்ரல் எக்ஸைஸ், நாகப்பட்டினம்.

6. எதிர்பாராதது— எஸ். டி. சம்பந்தம், ஸ்டேஷன் மாஸ்டர் வல்லம்படுகை.

7. கள்ளனின் உள்ளம்— என். நாராயணன் பி. ஏ., ரயில்வே ஆபீஸ், திருச்சி.

8. பசி— ரா. நீலமேகம் (விலாசம் தெரிவிக்கவும்)

9. தேசமும் வயிறும்— நாகர்கோயில் கே. மகாதேவன், போலீஸ் கமிஷனர் ஆபீஸ் ரோடு, எழும்பூர், சென்னை.

(1-2-47— தேதிக்குப் பிறகு வந்த கதைகளில் பரிசுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகளின் விவரம் கூடிய சீக்கிரம் வெளியாகும்.)

—மானேஜர், பாரிஜாதம்.

வாழ்வு என்பது நிஜமல்ல, அது ஒரு கொடிய பயங்கரக் கனவு. இந்தக் கருத்தை கற்பனை ததும்பும் இந்தக் கதையில் கூறுகிறார் 'கல்பனா'.

# கனவா நனவா?

"கல்பனா"

அவள் எப்படி அங்கு வந்தாளோ அவள் அறியாள். எங்கிருந்து, எப்படி, ஏன் வந்தாள் என்பதும் அவளுக்குத் தெரியாது. எப்படியோ தான் ஒரு பட்டணத்து அலங்கார வீதியில் நடந்து கொண்டிருப்பதை மாத்திரம் உணர்ந்தாள். அந்தப் பட்டணத்து வீதியின் வேடிக்கைகளையும் தன்னைப்போல் அதில் உலாவிச் செல்லுபவரையும் கவனித்துக் கொண்டும் சென்றாள். தன்னைப் பற்றிய எண்ணங்களையே அடியோடு மறந்தாள். அப்பொழுது ரமணீயயாகத் தென்றல் அவள் கன்னங்கள் மீது அலைமோதின. ஆஹா! அப்பொழுது என்ன இன்ப உணர்ச்சி உண்டாயிற்று! அந்த தென்றல் அள்ளிவந்த பரிமளத்தை பருகிக் கொண்டே திரும்பினாள். அந்தத் தெருக்கோடியில் அமைந்திருந்த தோர் நந்தவனத்தைக்கண்ணுற்றாள். இயற்கை அன்னை இன்ப வெறியால் தலைவிரித்துத் தாண்டவமாடும் வசந்த காலமது. புஷ்பங்களின் வனப்பிலும் பக்ஷிவர்க்கங்கள் போடும் கொம்மாளத்திலும் தன் ஹிருதயத்தைப் பறிகொடுத்து விட்டாள். உடனே அவள் உள்ளத்தில் "ஆஹா! நானும் என் அந்த வண்ணக்கிளியுடன் உல்லாசமாய்ப் பறந்து நீலவானை எட்டிப் பிடிக்கக் கூடாதா? அந்த வானம்பாடியுடன் போட்டி போட்டுப் பாடவேண்டும். ஆமாம், அந்த கீதம் பாடும் குயிலைப் பழிக்க வேண்டும், நான் கானத்தில். அதோ துள்ளி ஓடும் மானுடன் நானும் ஓடிக் குதிக்க வேண்டும்!" என்றெல்லாம் பலவாறு எண்ணமிட்டாள். சூரியன் தன் ஆதிக்கத்தை ஒடுக்கும் நேரம் வந்துவிட்டது. பறவைகள் தத்தம் கூட்டிற்குள் புகுந்து விட்டன. கதிரவனும் மலைவாயில் மெல்ல விழுந்து விட்டான். ஆனாலோ, தன்னை ஒத்ததொரு வெள்ளி உருவத்தை கிழக்கே காவல் இருத்தி விட்டுச் சென்றான். வெண்ணிலா தன் மாய வலையை வீசி, மண்ணுலகை பொன்னுலகாக மாற்றிக் கொண்டிருந்தது. சில காதலர்கள் நந்தவனத்தில் உலாவ வந்தார்கள். அப்பொழுதுதான் அவளும் தனக்கு அந்த ஊரில் யாரையும் தெரியவில்லையே என்பதை உணர்ந்து வருந்தினாள்.

* * *

வீடு வீடாய்ச் சென்று யாராகிலும் தனக்கு அடைக்கலம் கொடுப்பாரோ என்று பார்த்தாள். தெருவில் செல்பவரை ஏதாவது ஒரு சத்திரம் இருக்கும் இடத்தைச் சொல்லுங்கள் என்று கேட்டாள்- ஆனால் பலர் திரும்பியும் பாராமல் சென்றனர். அவளுக்கு அழுகை வந்தது. ஆனால் என்ன செய்வது? புது மனிதர்கள், இவளை அயல் நாட்டு மனுஷி என்று வெறுக்

கின்றனர் போலும்! தாகமும் பசியும் தள்ளாமையும் சகிக்க முடிய வில்லை. "ஐயோ, இப்படியும் ஒரு ஜனங்களா! ஒருவராவது ஒரு பேதை ஸ்திரீயிடம் பச்சாதாபம் பாராட்ட வில்லையே. இப்படித்தான் இந்த ஊர் இருக்குமோ?" என்று நொந்துகொண்டாள். பிறகு, மேலும் கதவுக்குக் கதவுசென்று தட்டிக் கூவி, தன் பரிதாப நிலையை அறிவித் தாள். ஆனால் எல்லோரும் அவள் முகத்தில் கதவைச் சாற்றி விட் டனர்.

"தன்னை ஆட்கொள்ள யாராவது அந்த பெரிய பரந்த ஊரில் இருப் பானோ" என்று ஏக்கத்துடன் ஒரு கதவைத் தட்டினாள். கதவு திறந் தது. ஒரு ஆண் மகன் வெளியே வந்தான். அவள் நிலைமையைக் கண்டு கொள்ளாதவன் போல அவளைப் பார்த்தான். "நீ யார்? என் இவ் விடம்வந்தாய்?"என்று வினவினான்.

"நான் இந்தஊருக்குப் புதிது இந்த ஊர் சத்திரம் எங்கு இருக் கிறது? இரவை எங்குக் கழிக்க லாம்? நான் என்ன வேலை வேண்டு மானாலும் செய்வேன். பிழைக்க ஒரு வழியும் தயவுசெய்து சொல்ல வேண்டும்" என்றாள். "சரி, நான் உனக்குச் சோறு போட்டு வீட்டில் வைத்துக் கொள்கிறேன். நீ நான் சொன்னபடி கேட்க வேண்டும்." என்றான். "அப்படியே" என்றாள் அவள். அவனைக் கண்டு மயங்கிய அவள் அவனது சொற்களைப் பாராட்டவில்லை. பாவம், பேதைப் பெண்ணல்லவா? அவள் உள்ளே சென்றாள். கதவுகள் தாளிடப் பட்டன.

* * *

தன்னை ஏற்றுக்கொண்டவன் பால் தன் மனம் முழுதையும் பறி கொடுத்து விட்டாள். ஏன் என்று தெரியாமல் அவனை அவள் காதலித் தாள். அவனுக்கு வேண்டிய பணி விடைகளை ஆவலுடன் செய்தாள். தானும் உண்டும் உறங்கியும் பொழு தைப் போக்கினாள். இப்படிச் சில காலம் சென்றபின், அவள் மனதில் சொல்ல வியலாததோர் ஏக்கம் தோன்றிற்று. அவள் வீடு ஒரு சந்தில் இருந்தது. இரண்டு பக்கங்களிலும் வீடுகள் அமைந்திருந்தன. ஆகை யால் சாளரங்களே இல்லை. வாசற் கதவும் எப்பொழுதும் பூட்டப் பட்டிருக்கும். அதன் வழியே, தன் கணவன் மாத்திரம் செல்வதையும், வருவதையும் பார்த்திருந்தாள். ஜன்னல் இல்லாததால் அந்த வீட் டிற்குள் சூரிய வெளிச்சமாவது, காற்றாவது துளிக்கூட வராது. எப் பொழுதும் விளக்கு வெளிச்சம் தான். அப்பொழுது அவள் தான் முன்பு வெளியில் கண்ட தோற்றங் களை நினைத்துக் கொள்வாள். சூரிய னின் ஒளியையும் சந்திரனின் தண் மையையும், குளிர்ந்த தென்றலையும், புஷ்பங்களின் நறுமணத்தையும், தான் கேட்ட அந்த குயிலின் இனிய கீதத்தையும் மனதில் நினைத்து நினைத்து ஏங்குவாள். ஒரு நாள் தன் எஜமானர், அல்லது கணவனைக் கேட்டாள். "நான் ஒரு அழகிய நந்தவனத்தை முன்பு பார்த்தி ருக்கிறேன். அதில் சிலர் உலாவிக் கொண்டிருப்பார்கள். நாமும் ஒரு நாள் அங்கு சற்று உலாவச் செல்ல லாமா?" "நந்தவனத்திற்கா, அங் கெல்லாம் நீ செல்லக் கூடாது. வீட்டைவிட்டு ஸ்திரீகள் எல்லாம் வெளியே செல்லக் கூடாது. புருஷர் கள் தான் வீட்டைவிட்டு எங்கு வேண்டுமானாலும் இஷ்டப்படி திரிந்து வரலாம். நீ இங்கு இருந்து, வீட்டு காரியங்களைக் கவ னிப்பதுதான் தர்மம். அழகு" என்று

மொழிந்து விட்டான். அந்த வார்த்தைகளில் அவள் மனம் திருப்தி அடையவில்லை. சில காலத்திற்குப் பிறகு அவள் மனம் வாழ்க்கையை வெறுக்கலாயிற்று. "இந்த இருட்டு அறைகளை விட்டு எப்பொழுது மறுபடியும் ஈசனின் சிருஷ்டியாகிய ஒளியையும், சுதந்திரம் என்னும் காற்றையும் பார்த்து அனுபவிப்பேன். நான் இது ஒரு சிறைச்சாலை என்பதை உணராது வந்து மாட்டிக்கொண்டு விட்டேனே. சுவற்றில் ஒரு பொந்து கூட இல்லையே? என்ன தீங்கிற்காக நான் இந்தத் தண்டனையை அனுபவிக்கிறேன்" என்று ஏங்கினள்.

ஒரு சமயம் அந்தக் கதவுகளை உடைத்துக் கொண்டு வெளி ஏற நினைத்தாள். கதவின் அருகில் சென்றாள். ஆனல் குழந்தையின் குரலைக் கேட்டு நின்றாள். " அம்மா, எங்கே அம்மா போறே? என்னைவிட்டு விட்டா போறே! நான் தனியா யிருக்கமாட்டேன் " என்று சொல்லிக் கொண்டே குழந்தை அவள் புடவையை இழுத்தான். பேதையின் மனம் பாலனின் வதனத்தைக் கண்டதும், குலைந்து விட்டது. "இங்கிருந்தால் நான் குழந்தைகளுக்குச் சேவை செய்யலாமல்லவா. அதுவே பெரிது. அதுதான் இனி என் பாழடைந்த வாழ்க்கையின் நோக்கம், அர்த்தம் எல்லாம்! இனி நான் இன்றுடன் சுதந்திர பாசத்தைத் துறந்தேன். சேவை செய்வதையே ஜன்ம இலட்சியமாகக் கொண்டேன் " என்று சபதம் செய்து கொண்டாள். குழந்தை பாலன் அன்பு வலையை வீசி மீண்டும் அவளை அடிமைப் படுத்தி விட்டான்!

அன்றிலிருந்து அவள்மனம் சாந்தம் பெற்றது. மனதில் உற்சாகமும்,



கண்டக்டர்: பாஸா?

மாணவன்: அதை ஏன் கேட்கிறாய்? பெயில் தான்!

---

அன்பும் ஆனந்தமும் நிறைந்தது. குழந்தைகளின் பணிவிடைகளிலேயே உயிரையும் உடலையும் செலுத்திவந்தாள். எல்லோரும் வீட்டில் இன்புற்றிருந்தனர். அவள் அல்லும் பகலும் உழைத்தாள். இளைப்பாறும்பொழுது அவள் அடைந்த சுகத்தை நினைத்துச் சந்தோஷிப்பாள்.

இப்படியே வருஷங்கள் பல சென்று விட்டன. காலச்சக்கரம் தேய்ந்து வரவே, குழந்தைகளும் வளர்ந்துவந்தனர். பிள்ளைகள் வேலை தேடிக்கொண்டும், பெண்கள் மணம் புரிந்து கொண்டும் வீட்டை விட்டுச் சென்று விட்டனர். முதலில் அவள் வாழ்க்கையில் பெரிய ஓய்வு ஏற்பட்டது. ஓய்வு நேரத்தில் செய்வதற்கு ஒன்றுமில்லாமல் தவித்தாள். சேவை செய்வதற்கு ஒருவருமில்லாததால், அவள் மனதில் உற்சாகம் குறைந்து வியாகூலத்தை யடைந்தது. ஏங்கி ஏங்கிப் படுப்பாள். மனச்சோர்வினுலும் முதுமையினுலும் சரீரமும் ஒத்துழைக்கமறுத்தது

அப்பொழுது ஒரு நாள் அவள் எசமானர் வந்து அவளை நோக்கினான். "உனக்கு உடம்பு சரியாயில்லை. வேண்டுமானால் உலாவச் செல்லலாம். நீ அந்த நந்தவனத்துக்குப் போக வேண்டுமென்பாயே போய்வரலாமா? என்றான். "இன்றைக்குத்தானா நந்தவனம் போக வேண்டும்? என் கால்கள் நோகின்றன. ஒரு அடிகூட எடுத்துவைக்க முடியாது." "சரி, அப்படியானால் இந்த ஜன்னல் கதவையாவது திறக்கிறேன். அது வழியாய் நந்தவனத்தைப்பார்." "ஐயோ, ஒன்றுமே தெரியவில்லையே கண்ணுக்கு! என் கண்கள் பார்வையை இழந்துவிட்டன" என்று கூறிக்கொண்டே படுக்கையில் சாய்ந்துவிட்டாள்!

* * *

சற்றுநேரம் மௌனம் பரவி யிருந்தது. அவள் துயிலைவிட்டு எழும் உணர்வைப் பெற்றாள். இரவில் துர்சொப்பனம் கண்டு காலையில் விழிக்கும்போது அடையும் இன்பத்தையும் சுய அறிவைப் பெற்ற உணர்ச்சியையும் பெற்றாள். முதலில் அவள் கண்டது ஒரே பிரகாசமான வெட்டவெளி. ஒன்றல்ல, பல சூரியர்கள் ஒரே காலத்தில் ஜ்வலிக்கும் ஒளியைப்போல் எங்கும் பரவியிருந்த வெளிச்சம் அவளுக்கு வெகு இன்பத்தைக் கொடுத்தது. கண்களை விழித்தாள். அந்த இருட்டு அறைக்குள்ளிருந்து எப்படி வந்தோம் என்று யோசித்தாள். உடனே இருட்டு அறையும் அதில் நடந்த சம்பவங்களும் நினைவிற்கு வந்தன "என்ன கோரமான கனவு கண்டேன்" என்று தனக்குள் கூறிக்கொண்டாள். "கனவிலிருந்து விழித்துக்கொண்டுவிட்டாயா?" என்று ஒரு குரல் பக்கத்தில் கேட்டது. அவள் திரும்பிப் பார்த்தாள். மனதை

அபகரிக்கும் எழிலுடனும், கண்ணைப் பறிக்கும் காந்தியுடனும், அருள் ததும்பும் வதனத்துடனும், ஒரு தெய்வீக ஸ்திரீ நின்றுகொண்டிருந்தாள்! "அம்மா!" என்று கதறிக் கொண்டு அவள் அந்த ஸ்திரீயை ஓடி அணைத்துக்கொண்டாள். அந்த அன்னை அவளைத்தழுவி முத்தமிட்டிட்டாள். "அம்மா! நான் ஒரு மகா பயங்கரமான கனவு கண்டேன். நல்ல வேளையாய் விழித்துக்கொண்டேன்- உங்களிடமும் வந்துவிட்டேன்" ஒன்று சொல்லிக்கொண்டு அந்த ஸ்திரீயின் கையை இறுகப்பிடித்துத் தழுவிக் கொண்டாள். "என் கண்ணே! சிறிது நேரம் கழித்து நீ மறுபடியும் நித்திரை செய்யவேண்டும். பல கனவுகளைக் காணவேண்டும்" என்றாள்.

"ஐயோ அம்மா, மாட்டவே மாட்டேன். நான் ஒருபொழுதும் தூங்கவேமாட்டேன். மறுபடியும் அந்தத் துன்பக் கனவுகளைக் காணமாட்டேன். என்னை மறுபடியும் தூங்கச் சொல்லாதேயுங்கள். நான் உங்களிடமே எப்பொழும் இருந்துவிடுகிறேன்."

"நீ சமத்தல்லவா? நான் சொல்வதைக்கேள். மறுபடியும் நீ தூங்கத்தான் வேண்டும். ஏனென்றால் நீ இன்னும் பல அரிய உண்மைகளைத் தெரிந்துகொள்ளவேண்டும். அவை கனவுதானே. தைரியமாகயிரு.கனவு முடிந்ததும் என்னைத்தானே காணப் போகிறாய்?" "அப்படியானால்அம்மா, நீங்கள் எனக்கு ஒரு வாக்குறுதி தந்தால்தான் நான் மறுபடியும் தூங்குவேன். என் கனவுகளில் நான் அல்லல்பட்டு, மனம் நொந்து, அதையே நிஜம்என்று நினைத்து உருகும் காலத்தில் எனக்குநீங்கள் அவை யெல்லாம் கனவு எனவும், அவைகளில் மூழ்கி நான் துன்புற வேண்டியதில்லை என்றும் ஞாபகப்படுத்தவேண்டும்" என்று கெஞ்சினாள். "அப்படியே ஆகட்டும் என் கண்ணே" என்று கூறினாள் தேவி.

● ● ●

## பழைய கதை — அறியாத கருத்து



போஜ மகாராஜன் ஒரு சமயம் ஒரு கவி புனைந்தான். தனது புலவர்களை அழைத்து அதைப் படித்துக் காண்பித்தான். "தீர்த்தத்தில் சிறந்தது கங்காதீர்த்தம்; அன்பில் சிறந்தது மனைவியின் அன்பு; ரஸத்தில் சிறந்ததுசிருங்கார ரஸம்" என்ற பொருள் பொதிந்திருந்தது. எல்லாப் புலவர்களும் 'பேஷ், பேஷ்!' என்று தலையை ஆட்டினார்கள். காளிதாசன் மட்டும், "இந்தப் பாட்டு தவறு" என்று கூறினான். "எப்படி" என்று அரசன் கேட்டதற்கு, "கங்கை போன்ற ஆறுகளுக்கு மழை பெய்தால்தான் ஜலம் வரும். ஆகவே மேகத்திலுள்ள நீர்த்திவலைகளே உயர்ந்த தீர்த்தமாகும். மனைவி இல்லாதவனுக்கு மனைவியின் அன்பு எப்படிக்கிடைக்கும்? ஆகவே தாயின் பேரன்பே சிறந்ததாகும். காதல் ரஸம் அழிந்துபோகக் கூடிய தல்லவா? கேட்கக்கேட்கத் திகட்டாதது கான ரஸமேயாகும்! என்று பாடிக்காட்டினான் காளிதாஸன்.

# ★ எழுத்தாளருக்கு

1. எழுத்தாளர்களிடமிருந்து நல்ல சிறு கதைகளை வரவேற்கிறோம். ஒவ்வொரு இதழிலும் வெளியாகும் சிறந்த சிறு கதைக்கு ரூ. 50 பரிசளிக்கப்படும். எந்தக் கதையும் பாரிஜாதத்தில் ஐந்து பக்கங்களுக்கு மேல் இருக்கக்கூடாது.

2. சமையல் குறிப்புகள், தேகத்தை அழகுபடுத்திக்கொள்ளும் முறை, குழந்தை வளர்ப்பு, ஆரோக்கிய வழி முதலிய விஷயங்களைப்பற்றிக் கட்டுரைகள் எழுதியனுப்பலாம்.

3. ஒவ்வொரு இதழிலும் ஒரு பிரயாணக் கட்டுரை வெளியாகும். கட்டுரைகளைப்புகைப் படங்களுடன் அனுப்புவது நல்லது.

4. நேயர்கள் அனுப்பும் புஸ்தக விமரிசனங்களும் சினிமா, நாடக விமரிசனங்களும் பாரிஜாதத்தில் பிரசுரிக்கப்படும். அந்த விமரிசனங்களைப் பிரசுரிக்கும் விஷயத்தில் அபிப்பிராய நேர்மைக்கும் எழுத்திலுள்ள வசீகரத்திற்கும் முக்கியத்துவம் கொடுக்கப்படும்.

5. ஒருவர் வாழ்க்கையில் எவ்வளவோ ஆச்சர்யமான, வேடிக்கையான சின்னஞ்சிறு சம்பவங்கள் நடக்கின்றன; அத்தகைய உண்மைச் சம்பவங்களைப் பாரிஜாதத்தில் பிரசுரத்துக்காக வரவேற்கிறோம்.

6. பாரிஜாதத்தின் புகைப்பட அனுபந்தத்தில் பிரசுரம் செய்வதற்காக நேயர்கள் புகைப்படங்கள் அனுப்பலாம். அவற்றுக்கு ஆசிரியர் உசிதம்போல் சன்மானம் அளிக்கப்படும்.



# இது என்ன மிருகம்?

இதோ படத்தில் வாயைப் பிளந்துகொண்டு ஒன்று நின்றுகொண்டிருக்கிறதே, அது என்ன மிருகம்? ஆம்; நீர்யானைதான்! ஆனால் பார்வைக்கு நீரில் உள்ள ஜந்துக்கள் மாதிரி உருவமும் கிடையாது; யானைமாதிரி துதிக்கையும் இல்லை. உலகில், அழகற்றவர்களை வர்ணிக்க ஆந்தை, குரங்கு, தேவாங்கு, பூனை, நாய்-முதலிய ஜந்துக்களை உபமானமாகக் கூறுகிறார்கள். ஆனால் பரிபூரணத் திருப்தியளிக்கும் உபமானம் வேண்டுமானால் இதோ இருக்கிறது நீர் யானை! நீர் யானையைக் காட்டிலும் விகாரமான முகம் உலகத்தில் வேறு எந்த ஜந்துவுக்கும் இருக்க முடியாது.

நீர் யானைக்குப் பசி வந்துவிட்டால் ஜலத்துக்கு வெளியே வந்துவிடும். ரேஷன் கீஷன் எல்லாம் நீர் யானைக்குச் சரிப்படாது. என்ஜினிலே நெருப்பில் கரியைத் தள்ளுவதுபோல் 'கபக்' 'கபக்'கென்று ஆகாரத்தை உள்ளே தள்ளினால் தான் பசி அடங்கும்.

நீர் யானையின் கால்களைப் பாருங்கள்! வாத்துக்களின் கால் மாதிரி குட்டையாக தட்டையாக இருப்பதால் வெகு வேகமாக ஜலத்தில் நீந்திச் செல்வதற்கு ரொம்ப சௌகரியமாயிருக்கிறது. நீர்யானைக்கும் மனிதர்களுக்கும் ஒரு விஷயத்தில் ரொம்பவும ஒற்றுமை இருக்கிறதாம் அதாவது, காதல்விஷயங்களை ரகசியமாக வைத்துக்கொள்வதில் மனிதர்கள் கூட அதற்கு இணையில்லையாம்!

# காதல் வர்ணனை

*முதல் நாள் அவளைப் பார்த்த பொழுதே அவள் பேரில் எனக்கு மோகம் ஏற்பட்டுவிட்டது. அவளுக்கு மேல் அழகாய் லோகத்திலேயே பெண்கள் இருக்க முடியாது என்று நினைத்துவிட்டேன். அழகு என்றாலும் அப்பேர்ப்பட்ட அழகு. சந்திர பிம்பம் மாதிரி முகம். முத்துக்கள் அரக்கின மாதிரி பல்வரிசைகள். முகத்தில் மயக்கம் தரும்படியான ஒருசிரிப்பு. மூக்கும் விழியும் கன்னங்களும் கண்ணைப் பறிக்கும்படியாக இருந்தன. பதினைந்து வயதில் ரேஸ் குதிரை மாதிரி ஒருகாம்பீர்யத்தோடும், அழகோடும் இருந்தாள்.*

**—எஸ். வி. வி.**

*தன்னையறியாமல் வந்து தூக்கத்தில் அவள் என்மேல் சாய்ந்தாள். கடலலைபோல் சுருண்டு, காற்றுப்போல் மிருதுவாயிருந்த அவளுடைய கூந்தல் என் கன்னத்தில் பட்டது. எனக்கு என்னமோ மாதிரி போய் விட்டது.*

**—தீபன்**

*சற்றுப்புன்னகைதோன்றும் முகத்துடன் அவள், அவனை நோக்கினாள். காந்தம் இரும்பை இழுப்பதுபோல் அவனை வசீகரித்தது, அவள் முகம். சண்பகமலரை ஒத்த மேனியும் கறுத்தகன்ற கண்களும், அடர்ந்து படிப்படியாய் விளங்கும் அழகிய கூந்தலினால் கவியப் பெற்ற பிறைச் சந்திரன் போன்ற நெற்றியும் அவன் உள்ளத்தை அப்படியே கொள்ளை கொண்டன.*

**—ஸவிதா**

*அவளை நன்றாக உற்றுக் கவனித்தேன். என்ன களங்கமற்ற முகம்! என்ன அழகு! என்ன அமைதி! என் கண்களுக்குப் பசி எங்கிருந்து வந்ததோ தெரியாது. அவை மலர விழித்து அவள் அழகைப் பருகிக் கொண்டிருந்தன.*

**—வையாபுரிப்பிள்ளை**

*என் கரு மாணிக்கம் சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். கட்டிலை அசைத்தேன். அவள் தூக்கம்விடிந்து விட்டது, மலர்ந்தன கண்கள்; பூத்தது முறுவல்; என் கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.*

**—கு. நா. குமாரசாமி**

*அவளுக்கு அந்த நீலப்புடவை என்ன அழகாக இருந்தது! யௌவனத்தின் சோபையுடன் அவளுடைய முகத்தில் புன்னகை ததும்ப நடந்து சென்றது, மனதில் பல விதமான உணர்ச்சிகளை எழுப்பியது.*

**—'லக்ஷ்மி'**

*அந்தப் பாதங்களின் அழகு அவன் மனத்தில் அழுத்தமாகப் பதிந்தது. மனதில் எண்ணிறந்த சுவைகளை உண்டாக்கியது. அந்தச் சதங்கை ஒலி அவனைக் கூப்பிட்டு ஏதோ பேசுவது போல் அவனுக்குத் தோன்றியது.*

**—என். சிதம்பர சுப்ரமணியன்**

*ஓடிச் சென்று வளைகளை எடுத்து வந்தார். என்னை மடியில் இருத்தி ஒவ்வொரு வளையாகப் போட்டார். மாறி மாறிப் போட்டார். பிரித்துப் பிரித்துப் போட்டார். அந்த வளையாடும் கைளோடு வெகு நேரம் விளையாடினேன்.*

**—அமரன்**

உலக இலக்கியம் :

# காதல் அழியுமா?

★ [சுன் - சான் என்பவர் பிரபல சீன எழுத்தாளர். உணர்ச்சியும் ஹாஸ்யமும் பொருந்திய பல கதைகளை இவர் எழுதி யிருக்கிறார். 'மழைக்காலக் கற்பனை' என்ற தலைப்புடன் இவர் எழுதியுள்ள கவர்ச்சி மிக்க இந்தக்கதைதான் கீழே தரப்பட்டிருக்கிறது]

மழைக்காலம் முடிந்து விட்டது. எனினும் பனி விடவில்லை. தூரத்தி லுள்ள மலை உச்சிகளை எல்லாம் பனி மூடிக்கொண்டு இருந்தது. வெண் பனி பொல பொல வென்று பூமி மீது வெள்ளித்திரை விரித்தது. வெளியில் யாரும் தலை கிளம்ப முடிய வில்லை. அவ்வளவு குளிர்.

ஜீவனற்ற குளிர் நிறைந்த பிரதேசத்தையும் பனிமூடிய மலையையும் ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தாள் யின் யின். அவளுக்கு இந்த அக்டோபருக்கு 28 வயது முடிந்து விட்டது. இதை நினைத்ததுமே அவளது மார்பகம் விம்மியது. பதினைந்து வருஷங்கள்! எப்படிப் போயின என்று தெரியாமலல்லவா அவை கழிந்துவிட்டன!

டப்! டபீர்! என்று அருகில் சத்தம் கேட்டது! ஒன்றுமில்லை; கணப்பில் இருந்த சில ஈரக் கரித்துண்டுகள் வெடித்து, நெருப்புப் பொறிகள் சிதறின. யின் யின் திரும்பிக் கணப்புச்சட்டியையே சிறிதுநேரம் பார்த்துக்கொண்டிருந்தாள். ஆம்; கரி வைத்திருக்கும் அறைச் சுவர்கள் சற்று விரிந்திருந்தன. அதன் வழியாக ஈரம் உள்ளே கசிந்து கரியை நனைத்திருக்க வேண்டும். வேண்டுமென்றே வேலைக்காரன் ஈரக்கரியாகப் பொருக்கிக் கொண்டு வந்து கணப்பில் போட்டிருக்கிறான்! அவன் மகா விஷமி!—சின்னஞ்சிறு பையனாக அந்த வேலைக்காரன் அவ் வீட்டில் வேலைக்கு வந்தான். இப்பொழுதோ லூ—இதுதான் வேலைக்காரன் பெயர்—அழகிய வாலிபனாக வளர்ந்து விட்டான். அவனுக்கு வயதாகிவிட்டபடியால், யின் யின்னின் தகப்பனார் அவனுக்கு ஒரு வேலை சம்பாதித்துக் கொடுத்து வேலையினின்றும் முதல்நாள்தான் நீக்கியிருந்தார். அவன் வேலையை விட்டுப்போகுமுன் அவன் கடைசியாக இந்த விஷமம் செய்ய நினைத்தான்போலிருக்கிறது!

அத்தனை நேரம்—ஜன்னல் பக்கம் எழுந்து போகுமுன் யின் யின் ஒரு பட்டுக் கைக்குட்டையில் பூ நூலால் விதம் விதமான பட்சிகளும், செடி கொடிகளும் பின்னிக்கொண்டிருந்தாள். மீண்டும் அதைக் கையிலெடுத்துப் பின்னத்தொடங்கினாள். அந்தக் கைக்குட்டை அவளது ஒன்றுவிட்ட சகோதரி அவளுக்குப் பரிசாக அளித்தது. அந்த சகோதரிக்குப் புது வருஷம் பிறந்ததும் கல்யாணம்! இன்னொரு உயிர்த் தோழியும் கலியாணமாகித் தன்னை விட்டுப் பிரியப்போகிறாள் என்பதை நினைத்ததும் அவளுக்குத் துக்கம் தாங்க முடியவில்லை.

அந்தப் பட்டுக் கைக்குட்டையில் இரு குயில்கள் அலகால் முத்தமிடுவது போல் படம் வரையப்பட்டிருந்தது. அதன் கீழ் **"காதல் எப்பொழுதும் அழியாது"** என்ற வாக்

கியம் எழுதியிருந்தது. அந்தப் படத்தைப் பின்னியவர் யின் யின்னின் தாயார். ஆனல் கீழேயுள்ள வரியை எழுதியது யார்? ஆம்; வேலேக்



கார வாலிபன் ஓர தான். அது எவ்வளவு அழகாகஎழுதப்பட்டிருந்தது? பையன் நல்ல படிப்பாளி. வேலேக்காரனுயிருந்தாலும் வெகு சீக்கிரத்தில் படிக்கக் கற்றுக்கொண்டுவிட்டான். அவன் தகப்பனரால்கூட இவ்வளவு ஜோராக எழுத முடியாது. ஒவ்வொரு எழுத்தும் விசேஷ பண்பாட்டையும் அதன் அமைப்பு சிறந்த கற்பன சக்தியையும் எடுத்துக் காண்பித்தன. (சீன தேசத்தில் நம்மைப்போல் சத்தத்தை வைத்துக் கொண்டு எழுத்து எழுதுவதில்லே. கருத்தை வைத்துக்கொண்டு எழுதுகிற வழக்கம்) "காதல் அழியாது" என்ற அவ்வார்த்தையை பல தடவை படித்துப் பார்த்தாள். அது அவளே என்னமோ செய்தது.

அன்று இரவு அவளுக்கு வெகு நேரம் வரை தூக்கம் வரவில்லே. பின்னர், படுக்கையில் படுத்த வண்ணம் பல இன்பக்கனவுகள் கண்டாள். சிறு குழந்தைப் பருவத்தில் நடந்த சம்பவங்கள் அவள் கனவில் தோன்றின. அவள் தகப்பனர் ஒரு மாஜிஸ்டிரேட். அவர் தன் சிநேகிதர் ஒருவரைத் தம் பெண்ணுக்கு பாடம் சொல்லிக்கொடுக்க ஏற்பாடு செய்திருந்தார். ஒரு நாள் வெகு நேரம் சீன இலக்கியத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்துவிட்டு, உபாத்யாயர் நாற்காலியில் உட்கார்ந்த படியே தூங்கிப்போனர் இதுதான் சமயமென்று யின் யின் தனது மேஜைக்குள் ஒளித்து வைத்திருந்த 'சிகப்பு அறைக் கனவுகள்' என்ற காதல் நாவலேப் படிக்கத்தொடங்கினள்.

அவள் தகப்பனர், இளைஞர்கள் அந்த நாவலேப் படிக்கக்கூடாது என்று பல தடவை கண்டித்திருக்கிருர். அந்தப்புத்தகத்தை அவர் அலமாரியில் ஒருவர் கண்ணுக்கும் படாமல் ஒளித்து வைத்திருந்தார். அந்தப் புஸ்தகத்தைபடிக்கக்கூடாது என்று அவர் ஆத்திரத்துடன் தினம் பிரசங்கம் செய்யும் போதெல்லாம், அதைக் கட்டாயம் படித்துப் பார்க்க வேண்டுமென்று யின் யின் னுக்குத் தோன்றிவிட்டது. ஒரு நாள், அதை எப்படியோ எடுத்துத் திருட்டுத்தனமாய் மேஜை அறைக்குள் ஒளித்து வைத்து விட்டாள்,

ஒரு நாள் யின் யின் அந்த நாவலை ஸ்வாரஸ்யமாகப் படித்துக் கொண்டிருந்தபோது, எதிர்பாராத ஒரு சம்பவம் நேரிட்டது. அன்று உபாத்யாயர் பலமான சாப்பாடு சாப்பிட்ட களைப்பினாலோ அதிகமாகப் பாடம் சொல்லிக்கொடுத்து உடம்பை அலட்டிக்கொண்டு விட்டதனாலோ, திடீரென்று குறட்டைவிட ஆரம்பித்து விட்டார். எதிர்பாராத அந்த அதிர்வெடிக் குறட்டையைக் கேட்டதும், யின் யின் திடுக்கிட்டவளாய், 'டக்' கென்று டிராயரை மூடினாள். அந்த சத்தத்தைக்கேட்டுத் திடுக்கிட்டெழுந்தார் உபாத்தியாயர்!

"என்ன நடந்தது?" என்று அதட்டிக்கேட்டார் உபாத்தியாயர். திரு திரு வென்று விழித்தாள் யின் யின். அப்பொழுதுதான் வேலைக்காரப்பையன் தோட்டத்திலிருந்து உள்ளே நுழைந்தான். "ஸார், ஸார்! இந்தச்சத்தத்திற்குக் காரணம் நான் தான். தோட்டத்தில் ஒரு நாற்காலி இருக்கிறதல்லவா? அதைத் தூக்கிவரும்போது தவறிக் கீழே போட்டுவிட்டேன்" என்றான்.

"இதுமாதிரி இனிமேல் செய்யாதே, அதுவும் நான் சாப்பிட்டுவிட்டுத் தூங்கிக் கொண்டிருக்கும்போது" என்று எச்சரித்து அனுப்பினார்.

லூ வெளியே செல்லும்போது, யின்யின்னைக் கடைக்கண்ணால் கவனித்தான். பாவம், யின் யின்னின் முகம் வெட்கத்தால் சிவந்தது. ஆனால் அவன் சிரிக்க வில்லை. தலையைக் கவிழ்ந்துகொண்டு ஒன்றுமே நடக்காதவன்போல் வெளியே சென்றான்.

அவள் ரகசியம் எப்படியோ வேலைக்காரனுக்குத் தெரிந்திருக்கிறது! அவன் அறையைச் சுத்தம் செய்யும்போது, அவள் மேஜை டிராயரைத் திறந்து, அந்தத் தகாத புஸ்தகத்தை அவள் ஒளித்து வைத்துக்கொண்டு படிப்பதை அவன் பார்த்து விட்டான். சற்று முன்கூட அவள் அதை ஸ்வாரஸ்யமாகப் படித்துக் கொண்டிருந்ததையும் ஜன்னல் வழியாகத் தோட்டத்திலிருந்து அவன்பார்த்துக்கொண்டிருந்திருக்கிறான். அதனால்தான் உபாத்தியாயர் விழித்துக்கொண்டு, 'என்ன நடந்தது?' என்று கேட்டதும், அவன் ஓட்டமாக ஓடிவந்து, கஷ்டமான நிலைமையிலிருந்து அவளைக் காப்பாற்ற முடிந்திருக்கிறது.

இன்னொரு சம்பவம் அவள் கனவில் குறுக்கிட்டது. அப்பொழுது இலை யுதிர்காலம். சீனர்கள் கொண்டாடும் விசேஷப் பண்டிகை தினம் அன்று. மலர்கள் பறித்துவர ஏகாந்தமாக மலை அடிவாரத்தை நாடிச்சென்றாள் யின் யின். வெகு நேரம் பூப்பறித்துக் கொண்டிருந்து விட்டு அவள் தலையை நிமிர்த்தியதும், வேலைக்கார லூ தன் எதிரே நின்று கொண்டிருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டாள். அவள் முகத்தைச் சற்றுக் கடுமையாக வைத்துக் கொண்டாள். ஆனால் அந்தப் பையனோ... அவன் முகத்தில் புன்னகை! அந்தச் சிரிப்பு ஒரு அசட்டுச் சிரிப்பாகக் கூட இருந்தது. ஆறு வருஷங்களுக்குமுன் அவன் சிறுவனாக இருந்தபோது இப்படித்தான் அவன் சிரிப்பான். பாலப்பருவத்து நினைவுகள் பல உள்ளத்தில் குமுறவே, முகத்தில் கடுமை கலைந்து மந்தஹாசம் மலர்ந்தது.

அப்பொழுது அவ்வாலிபன் கையில்நிறையப் பூங்கொத்துக்கள் இருந்தன. அவன் பயபக்தியுடன் தலை குனிந்த வண்ணம், யின் யின்னைப் பார்த்து, "இதோ, உன் வேலைக்காரனின் இந்தப்பரிசை அங்கீகரிக்க வேணும். உன் அழகின் அடிமையாகிய நான் கொடுக்கும் இந்தப் பரிசை மனமுவந்து ஏற்பாயா?" என்று கேட்டான்.

புன்னகை அரும்பிய யின் யின்னின் முகம் கண நேரத்தில் ஆத்திரத்தால் சுருங்கியது. "உனக்கு இவ்வளவு ஆணவமா?"—என்று யின் யின் நினைத்துக்கொண்டாள்.

ஆனால் லூவின் முகத்தில கட்டுக் கடங்காத வாலிபத்தின் உணர்ச்சியையும் ஆவேசத்தையும் பார்த்ததும் அவள் மௌனியானாள். ஆயினும் கோபத்தை வருவித்துக்கொண்டு, "போக்கிரி! அந்தண்டை போகிறாயா இல்லையா?" என்றாள்.

இருவரும் வாய்திறந்து பேசமுடியாமல் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு நின்றனர். கடைசியில், "போயேன்! எதற்காக என்னைத் தொந்தரவு செய்கிறாய்?" என்றாள் யின் யின். "என் இதயராணி! உன்னை நான் வணங்குகிறேன்" என்று நாடகத்தில்வரும் கதாநாயகனைப்போல் ஆரம்பித்து, "முழுமதியைப்போல் உன் கண்கள் ஒளி வீசுகின்றன!" என்று கூறிக்கொண்டே அவள் முகத்தினருகே நெருங்கினான்.

...சட்டென்று அவள் கண்டு கொண்டிருந்த இன்பக்கனவு இந்த சமயத்தில் தடைப்பட்டது. படுக்கையில் மீண்டும் திரும்பிப் படுத்துக் கொண்டு, மறுபடியும் கனவு உலகில் சஞ்சரிக்கத் துடிதுடித்தாள். ஆனால்... இந்த சமயத்தில் பெற்றோர்கள் அறையிலிருந்து சத்தம் வந்தது. யின் யின் விழித்துக்கொண்டாள். "யின் யின் வேலைக்காரப் பையன் பெயரைக் கூவிக்கொண்டிருப்பது உங்கள் காதில் விழுந்ததா?" என்றாள் அவள் தாயார் சற்று உரக்க. "ஏதோ கெட்ட சொப்பனம் கண்டிருப்பாள்!" என்றார் தகப்பனார். "இதில் ஏதோ விசேஷமிருக்கிறது. இங்கே பாருங்கள்! புது வருஷம் பிறக்கப்போகிறது. சயோ—இவருக்குத்தான் யின் யின்னைக் கலியாணம் கொடுப்பதாய் நிச்சயிக்கப்பட்டிருந்தது — என்ன சொல்கிறார் என்று கேட்டுக்கொண்டு வாருங்கள்! குழந்தைக்கும் வயதாகிவிட்டதல்லவா? கலியாணத்தை முடித்து விடுவோம்" என்றாள் தாயார்!

★

சயோ குடும்பம் மிகவும் பிரபலமான செல்வந்தர் குடும்பம். யின் யின் பிறந்த சில நாட்களுக்கெல்லாமே சயோ குடும்பத்தின் இளைய பிள்ளைக்கு அவளைக் கலியாணம் செய்து கொடுப்பதாய் நிச்சயிக்கப்பட்டது. ஆனால் யின் யின் தனக்குக் கணவனாக வரப்போகும் ஆண்மகனை அது வரை பார்த்ததில்லை. சயோ முகூர்த்தத்துக்குச் சம்மதித்து விட்டால், முன் பின் அறியாத ஒருவனை அவள் கலியாணம் செய்து கொள்ள வேண்டியதுதான்; இதை அவளால் பொறுக்க முடியவில்லை.

யின் யின் கைக்குட்டையை எடுத்து வைத்துக்கொண்டாள். வேலைக்கார வாலிபன் எழுதியிருந்த 'காதல் அழியாது' என்னும் வாக்கியத்தைப் படித்தாள். ஒரு கண்ணீர்த் துளி அந்த எழுத்தின்மீது உதிர்ந்தது!

யின் யின் கொந்தளிக்கும் உள்ளத்துடன் ஜன்னலருகில் வந்து நின்று எதிரே தோன்றும் மலை வெளியைநோக்கினாள். மனமுடைந்து உயிரைப் போக்கிக்கொள்ள அவள் நினைக்கவில்லை. சீன வேதாந்தத்தின் உயர்ந்த தத்துவத்தை நன்கறிந்தவள் யின் யின். தன் எதிர்காலம் எப்படியிருக்கிறது என்பதை அறிந்துகொள்ள அவள் உள்ளம் துடித்தது. ஆகவே, அவள் ஒரு ஜோதிஷ அறிஞரின் உதவியை நாடுவதென்று தீர்மானித்தாள்.

ஊருக்கு 2 மைலுக்கு அப்பால் ஒரு குடிசையில் புகழ்பெற்ற அந்த ஜோதிஷர் இருந்தார். கோவிலுக்குப் போய்த் தொழுதுவிட்டு வருவதாக அன்னையிடம் சொல்லிவிட்டு, ஜோதிஷரைப் பார்க்கக் கிளம்பினாள் யின் யின்.

எதிர்காலத்தின் திறவு கோலை நாடி தன்னிடம் வந்தடைந்த பெண்ணை அறிவிற் சிறந்த அந்த முதியவர் கருணையுடன் பார்த்தார். வெகுநேரம் அவள் ஜாதகத்தைப் பரிசீலனை செய்து பார்த்துவிட்டுப் பின்வருமாறு கூறினார்.

"அம்மா! உமது கணவன் அழகாகவும், கவிஞனாகவும் இருப்பான்! நீ பிறந்தவேளை விடியற்காலை. கிழக்கே அடிவானத்தின் சிவப்பு நிறம் வெகு சீக்கிரத்தில் மங்கி மறைவது போல் உன் சந்தோஷமும் வெகு சீக்கிரத்தில் மறைந்துவிடும் அம்மா!"

பேரிடிபோன்ற இந்த மொழியைக் கேட்டதும் யின் யின் தேகம் நடுங்கிற்று.

"உனது கணவன் உயர்ந்த குலத்தில் பிறக்காவிட்டாலும் மிகவும் மேன்மையான மனிதன். கூடிய சீக்கிரத்தில் முக்தியை அடைவதற்காக நீ உலகத்தைத் துறந்து சந்நியாசினியாக ஆவாய்! உலக இன்பங்களில் எப்பொழுதுமே நீ ஆசை வைக்கவில்லை! இவ்வளவு தானம்மா நான் சொல்லக்கூடியது" என்று கூறி முடித்தார்.

யின் யின் அறிஞரை வணங்கி விட்டு, வீடு திரும்பினாள். வரும் வழியில் மணமலர் மிகுந்த புல்வெளி ஒன்று இருந்தது. சூரியன் கிளம்பி வெகுதூரம் வந்து விட்டான். தூரத்தில் யாரோ ஒருவர் தன்னை நோக்கி வந்து கொண்டிருப்பதைப் பார்த்தாள். கண் கூசாமல் இருப்பதற்காக, நெற்றியில் கையை வைத்து மறைத்துக்கொண்டு தூரத்தில் யார் வருவதென்று கவனித்தாள். ஆம்; அவனே தான். லூ தான்! தான் வெளியில் புறப்பட்டு வந்திருப்பதை அறிந்துகொண்டு, தன்னைத் தேடிக்கொண்டு வருகிறான்!

அவனை யின் யின் பார்த்துப் பல நாட்கள் ஆயின. வேலையை விட்டுப் போனதிலிருந்து யின் யின் முதன்முதலாக அவனை இப்பொழுது தான் சந்திக்கிறாள். மறு நிமிஷம் லூ அவள் முன் நின்றான்.

சில தினங்களில் எப்பேர்ப்பட்ட மாறுதல்! அவன் தேகம் இளைத்திருந்தது. கண்களில் அலாதி காந்தி வீசியது. அவன் நீலநிறப் பட்டுச் சொக்காய் அணிந்திருந்தான். அவனுக்கும் ராஜகுமாரனுக்கும் அதிக வித்தியாசம் இருப்பதாக யின் யின்னுக்குத் தோன்றவில்லை.

"உன்னை இங்கே சந்திக்க நான் எவ்வளவு பாக்கியம் செய்திருக்க வேண்டும்?" என்றான் லூ. சட்டென்று ஜோதிஷ அறிஞர் கூறியது யின் யின்னுக்கு ஞாபகம் வந்தது. "அவர் குறிப்பிட்ட புருஷன் லூவாகத்தானிருக்கவேண்டும். அவள் புருஷன் ஏழை என்று கூறினாரல்லவா? மேலும், எதிர்பாராத இந்த சந்திப்பு ஏற்பட்டிருக்க வேண்டியதில்லையல்லவா?" என்று நினைத்தாள்! "எனக்கும் உன்னைப்பார்க்கச் சந்தோஷமா யிருக்கிறது. எல்லாம் கனவில் நடப்பது போலல்லவா இருக்கிறது?" என்றாள் யின் யின்.

லூ, சட்டென்று நினைவு வந்தவனாக, "ஆ, இன்றும் புது வருஷ தின மல்லவா?" என்று கூறி பக்கத்திலிருந்த மலர்க் கொடியை எடுத்து அவள் தலையில் சூடி, அவளது தளிர்க்கன்னத்தில் ஒரு முத்தமும் இட்டு விட்டான்.

"என்ன காரியம் செய்தாய்? போக்கிரி! யாராவது இதைப் பார்த்துவிட்டால் என்ன நினைத்துக் கொள்வார்கள்?" என்றாள் யின் யின்.

"என்னை ஒரு ராஜகுமாரி இட்டிட்டாள் என்று பதில் சொல்வேன்" என்றான் லூ.

"இனிமேல் இம்மாதிரி செய்யாதே!" என்று கடிந்து கொள்வது போல் பாவனை செய்தாள் யின்.

"ராஜகுமாரி கட்டளைப்படியே இந்த அடிமை நடப்பேன்" என்றான் லூ.

மனோகரமான பலவிஷயங்களைப் பேசிக்கொண்டே இருவரும் வழி நடந்தனர்.

“சரி வீடு வந்து விட்டது. இனி மேல் நாம் பிரிய வேண்டியதுதான்” என்ருள். “நாம் மறுபடி எங்கே சந்திக்கலாம்?” “வஸந்த கால உத்சவம் வந்ததும், நான் மலே யடிவாரத்தில் சமாதிக்கு அர்ச்சனைசெய்யத் தனியாக வருவேன் அப்பொழுது பார்க்கலாம்” என்று கூறிவிட்டு நடந்தாள் யின் யின்.

★

யின்யின் ஜோதிஷரைப் பார்க்கப் போயிருந்த சமயத்தில், அவள் தாயாரும் தகப்பனும் அவள் கல்யாண விஷயமாகப் பேசிக்கொண்டிருந்தனர்.

“நம் குழந்தைக்கே தன் வாழ்க்கையைப்பற்றி அக்கரை வந்துவிட்டது. தனக்கு நல்ல அகமுடையான் வேண்டுமென்று சுவாமியைப் பிரார்த்தனை செய்யப் போயிருக்கிருள் போலிருக்கிறது! இப்பொழுதே சயோவுக்கு கடிதம் எழுதி அவர்கள் சம்மதத்தைத் தெரிந்துக் கொள்வோம்” என்ருள் தாயார்.

யின் யின்னின் தகப்பனும் இதற்குச் சம்மதித்து, சம்பிரதாயப்படி சயோ குடும்பத்தாருக்குத் தன் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்வதில் சம்மதந்தானு? என்று விசாரித்துக் கடிதம் எழுதினர்.

சில தினங்களில் பதிலும் வந்து விட்டது. சீன வழக்கப்படியே சயோ குடும்பத்தார்கள் சம்மதத்தைத் தெரிவித்துக் கடிதம் எழுதினுர்கள். வஸந்த உத்சவம் கழிந்த ஐந்தாவது நாளன்று யின் யின்னுக்கும் சயோ இளைய குமாரனுக்கும் மண முடிப்பதாய் முடிவு செய்யப் பட்டது.

இந்த முடிவைக் கேட்டு யின் யின் திடுக்கிட்டாள்: ஜோஸியர் சொன்னது என்ன, இப்பொழுது நடந்திருப்பதென்ன? தன் கணவன் ஏழையாக இருப்பான் என்றல்லவா அவர் சொன்னுர்? ஒரு வேளை இந்தக் கலியாணம் நின்றுபோகுமோ? சயோவுக்கு எதிர்ப்பாராத ஆபத்து ஏதேனும் ஏற்பட்டு இந்த விவாகம் கடைசி நிமிஷத்தில் தடைப்படுமோ, என்னமோ?

அவள் மனம் புயலிலகப்பட்டுத் தத்தளித்துக் கொண்டிருந்தபோது தான், வஸந்த உத்சவ தினம் வந்தது. பெரியோர்கள் சமாதியில் மலர் தூவி வருவதற்காக யின் யின் புறப்பட்டாள். சமாதியருகில் ஒரு மரத்தடியில் தலையில் கையை வைத்துக் கொண்டு துக்கமே உருவாக லூ உட்கார்ந்திருப்பதை அவள் கவனித்தாள்.

“லூ! ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிருய்?” என்று அருகில் சென்று கேட்டாள்.

திடுக்கிட்டு எழுந்து, கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்த்தான் லூ. ஆனல் அவன் வாய் திறந்து பேசவில்லை.

“ஏன் பேசாம லிருக்கிருய்?” என்று கேட்டாள்.

“யின் யின்! உன்னை இனிமேல் பார்க்கவே முடியாதோ என்று நினைத்துவிட்டேன். வேலைக்காரக் கிழவன் லோ வின் மூலம் எல்லா விஷயங்களையும் தெரிந்துகொண்டு விட்டேன். வேருெரு மனிதன் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிருன். எனக்கு இரவெல்லாம் தூக்கம் இல்லை. என் மனம் ஓயாத சித்திர வதை செய்கிறது” என்ருன்.

“ஐயோ, லூ!” என்று இரண்டே வார்த்தைகள் மொழிந்தாள், யின் யின். இதற்குமேல் அவளால் பேச முடியவில்லை.

“யின் யின்! நாம் கண் காணுத இடம் — சுயேச்சையாக வாழக் கூடிய இடம், மூடப் பழக்கங்களும் ஜாதி வேற்றுமையும், வாழ்வின் ஏற்றத் தாழ்வுகளும் இல்லாத இடம் —போம் விடுவோமே” என்று கூறி வந்தவன் சட்டென்று நிறுத்தினுன்.

அவன் முகம் வெளுத்துவிட்டது. உதடுகள் துடித்தன.

"ஆம்; உனக்கேற்ற லாயக்கான புருஷன் நானல்ல!" என்றான்.

யின் யின்னால் அவள் வார்த்தைகளைப் பொறுக்க முடியவில்லை.

"நான் மனப்பூர்வமான உன்னைக் காதலிக்கிறேன்" என்ற வார்த்தைகள் தென்றலைக் காட்டிலும் மிருதுவாக அவளிடமிருந்து வெளி வந்தன.

லூ கீழே மண்டியிட்டான். தன் இதயத்தை ஒட்டின அறைப் பையிலிருந்து ஒரு கைக்குட்டையை எடுத்து, கையை நீட்டி யின் யின்னுக்கு அதைப் பரிசாக அளித்தாள்.

யின் யின் அதை வாங்கிப் பிரித்துப் பார்த்தாள். அவள் இதயத்தைக் கொள்ளை கொண்ட அவ்வார்த்தைகள், அவள் உள்ளத்தை ஆனந்தத்தில் ஆழ்த்திய அவ் வார்த்தைகள், அதில் இருந்தன.

## காதல் என்றும் அழியாது

யின் யின் கைக்குட்டையை மடித்து வைத்துக்கொண்டு,

"நீ எழுதியிருப்பது வாஸ்தவந் தானா?"

"ஆமாம்; முக்காலும் உண்மை."

"நாழியாகி விட்டது. புறப்பட வேண்டும். கடைசி நிமிஷத்தில் எதுவும் மாறலாம். ஆனால் நான் உன்னைக் காதலிப்பது மட்டும் சத்தியம்" என்று கூறி அவனைத் தூக்கி நிறுத்தி முத்தமிட்டாள் யின் யின்.

லூ மதிமயங்கி அவளைப் பார்த்தபடியே நின்றான். இம்மாதிரி அவள் அந்தரங்க எண்ணத்தை வெளிப் படையாக நிரூபிப்பாள் என்பதை அவன் கொஞ்சமும் நினைக்கவில்லை.

யின் யின் கூறிய கடைசி நிமிஷம் கூட வந்தது. ஆனால் கலியாண ஏற்பாட்டில் மாறுதல் எதுவும் இல்லை. பெரியோர்கள் குறித்த சுதினம் வந்தது. யின் யின் வீடு அமர்க்களப் பட்டது. மாப்பிள்ளை வீட்டில் விருந்தினரும் சுற்றத்தாரும் சீனாவின் நாலாபக்க மிருந்தும் வந்து கூடியிருக்க, சம்பிரதாயப்படி வந்து பெண்ணைக் கூப்பிட்டார்கள். காலை நேரத்திலிருந்தே பிரமாதமாய் அலங்கரிக்கப்பட் டிருந்த மணமகள் யின் யின் வண்டியிலேறி மாப்பிள்ளை வீட்டுக்குச் சென்றாள். பிறகு வழக்கப்படி, மணமகனும் மணமகளும் கை கோர்த்துக் கொண்டு மணவறைக்குச் சென்றனர்.

புரோகிதர் சம்பிரதாயப்படி கேட்கும் கேள்விகளைக் கேட்டார். தம்பதிகள் மண்டியிட்டு வணங்கினர். கல்யாணம் முடிய இன்னும் ஒரே ஒரு கேள்விதான் பாக்கி.

"கலியாணம் முடிந்து விட்டது என்பதைக் குறிக்க தம்பதிகள் ஒருவரையொருவர் தலைகுனிந்து வணங்குங்கள்!" என்று கடைசியாகக் கூறினார் புரோகிதர்.

முதலில் மணமகள் வணங்க வேண்டும். யின் யின் வணங்குவதற்காகத் தலை குனிந்ததும், சபையில் திடீரென்று ஒரு ஆரவாரம் உண்டாயிற்று. கூட்டத்தி லிருந்த ஒரு வாலிபன் "என்னால் பொறுக்க முடியாது, பொறுக்க முடியாது!" என்று கத்தியபடியே மூர்ச்சையடைந்து கீழே சாய்ந்தான், அவன் வேறு யாருமில்லை! லூ தான்!

"நான் இப்பெண்ணைக் காதலிக்கிறேன். என் பிராணனை விட்டு விடுகிறேன்!" என்று மயக்கத்தில் கத்தினான். அவனை யாரோ பைத்தியக்காரன், என்று எண்ணி, சபையினர் கொல்லென்று சிரித்தனர். உடனே அவன் அப்புறப் படுத்தப் பட்டான்.

சடங்கு முடிந்தது. "அந்தப் பைத்தியக்காரன் கத்தியபோது, யின் யின் முகத்தைப் பார்த்தாயா? கண் கலங்கி அவள் துக்கப்படுவது போ

ல்லவா இருக்கிறது?" என்று சில விருந்தினர் பேசிக்கொண்டார்கள்.

★

அன்று இரவு சோபன அறையில் சயோவும் யின் யின்னும் தனித்திருந்தனர். யின் யின் கட்டிலின் ஓரத்தில் துக்கமே உருவாக தலை கவிழ்ந்து உட்கார்ந்திருந்தாள். மணமகள் தூரத்திலிருந்த இரண்டு மெழுகுவர்த்தி தீபத்தைப் பார்த்வாறு கற்சிலைபோல் நின்றான்.

வெகுநேரம் கழித்து, அவன் சட்டென்று திரும்பினான்.

"முகூர்த்தத்தின் போது ஒரு காலிப்பயல் மூர்ச்சையடைந்தானே, அவனை உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான் ஆத்திரத்துடன்.

"தெரியும்; சின்னக் குழந்தைப் பருவத்திலிருந்து அவன் எங்கள் வீட்டில் வேலைக்காரனாக இருக்கிறான்!" என்று பயத்துடன் மொழிந்தாள் யின் யின்.

"வேலைக்காரனாயிருந்தானா?" என்று பரிகாசக் குரலில் கேட்டான் சயோ. இதற்கு மேல் அவன் ஒன்றும் பேசவில்லை. படுக்கையில் 'தொப்' பென்று தாவிப் படுத்துக்கொண்டு தூங்கிப் போனான். யின் யின் கற்சிலைபோல் உட்கார்ந்த வண்ணம் மெழுகுவர்த்தி சுடர்விட்டு எரிவதையே பார்த்துக் கொண்டிருந்தாள். மெழுகு உருகிக் கீழே வழிவதையே வெகுநேரம் பார்த்துக்கொண்டிருந்தாள். கடைசியில் வர்த்தி அணைந்து அறைமுழுதும் இருளில் மூழ்கியதும், பிறகு ஜன்னல் வழியே காலை நேரத்தின் மங்கிய வெளிச்சம் தெரிவதும் கனவில் காணும்காட்சிகளைப் போலிருந்தன.

...முகூர்த்தம் நடந்த மூன்றாவது நாள், மாப்பிள்ளை மாமனார்வீட்டுக்கு விஜயம் செய்வது சம்பிரதாயம். ஆனால்சயோவுக்குஉடம்பு சுகமில்லை என்றுகூறி மாமனார் வீட்டுக்கு வரவில்லை. யின் யின்னின் தகப்பனார் அவமானத்தால் தலைகவிழ்ந்தார். ஆனால் மாப்பிள்ளைக்கு பதிலாக அவனிடமிருந்து கடிதம் ஒன்று வந்தது. அதைப் படித்ததும் யின் யின் தகப்பனார் முகம் முதலில் சிவந்தது; பிறகு வெளுத்து விட்டது.

(தொடரும்)

## பெறுமானம் ★ ★ ★

ஒரு ஆற்றங்கரை வழியாக ஒருவன் போய்க்கொண்டிருக்கும் போது, ஒரு மனிதர் ஆற்றில் விழுந்து தத்தளித்துக் கொண்டிருப்பதைக் கண்டான். சட்டென்று ஆற்றில் குதித்துத் தத்தளிக்கும் மனிதனைக் கரையேற்றி அவன் உயிரைக் காப்பாற்றினான். அவ்வாறு உயிர் தப்பிய மனிதன் அவ்வூர் பிரபல மிராசுதாரர் என்று தெரிந்தது. உயிர் தப்பிய மிராசுதாரர் தன் சட்டைப் பையிலிருந்து இரண்டு ரூபாயை எடுத்துத் தன்னைக் காப்பாற்றிய மனிதனுக்குப் பரிசாகக் கொடுத்தார்.

" இவ்வளவு பணக்காரர் 2 ரூபாய்தானா கொடுப்பது?" என்று பக்கத்திலுள்ளவர்கள் அதிசயித்தார்கள்! "அவர் உயிர் இரண்டு ரூபாய்தான் பெறும்" என்று அருகிலிருந்த ஒருவர் பதிலளித்தார்!

Edited and published by V. S. RAMAKRISHNAN B. A.
and printed at the Co-operative Press Limited, Pudukkottai.



# கடகம்

தமிழ் நாடு டாக்கீஸ்

டைரக்ஷன்

**ஆசார்யா**



ஏப்ரல் 14-ம் தேதியிலிருந்து சென்னை கெயிட்டியில்.

